Regd. No. M. 1725 [illegible] ௧

# செந்தமிழ்ச்செல்வி

திங்கள் வெளியீடு



The South India Saiva Siddhanta Works Publishing Society, Tinnevelly, Ltd.

---

ஓம்
திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள்தோறும் வெளிவருவது

| சிலம்பு ஏ | மெய்கண்டான்யாண்டு-எாசூ தைத்திங்கள் 1929ஞூ ஜன்வரீமூ—பிப்ரவரிமூ | பரல் க |
| --- | --- | --- |

திருச்சிற்றம்பலம்

கோடிகளிடைக்குயில் கூவுமிடம்மயி
லாலுமிடம்மழு வாளுடைய
கடிகோள்புனற்சடை கோண்டநுதற்கறைக்
கண்டனிடம்பிறைத் துண்டமுடிச்
சேடிகோள்வினைப்பகை தீருமிடந்திரு
வாகுமிடந்திரு மார்பகலத்
தடிகளிடம்மழல் வண்ணனிடங்கலிக்
கச்சியனேகதங் காவதமே.

சுந்தரர்.

உரை :

'கடிகொள் புனற் பிறைத்துண்ட முடிச்சடை நுதல் கொண்ட கறைக்கண்ட னிடம்' என்று இதன் இரண்டாம் அடியை மாற்றி யமைத்துக் கொள்க.

'வாள்உடைய சடைகொண்ட கறைக்கண்டன்' என்று அவ் வடிக்கு வினை முடிவு செய்து கொள்க.

இவ் விரண்டாம் அடியை அடுத்துத் 'திருமார்பகலத் தடிகளிடம் மழல் வண்ணனிடம்' என்னும் பின்வரும் அடிகளை இணைத்துக் கொள்க.

இப்பொழுது இத்திருப்பாட்டைக்

'கொடிகள் இடைக் குயில் கூவும் இடம்; மயில் ஆலும் இடம்: மழுவாள் உடைய, கடிகொள் புனல் பிறைத்துண்டம் முடிச்சடை நுதல் கொண்ட, கறைக்கண்டன் இடம்; திருமார்பகலத்து அடிகள் இடம்; அழல் வண்ணன் இடம்; செடிகொள் வினைப்பகை தீரும் இடம்; திரு ஆகும் இடம் கலிக் கச்சியனேகதங்காவதம்'

என்று முறைப்படுத்திக் கொள்க.

இனிச் 'செடி கொடிகளிலே அமர்ந்து குயில்கள் இசை பாடும் இடமாயும்; அக் கொடிச் செடிகளின் இடையிலே நின்று மயில்கள் நடமாடும் இடமாயும்; மழுவையும் வாளையும் கைகளிலே உடைய, பெருக்கங் கொண்ட தண்ணீரும் பிறைத்துண்டான மூன்றாம் பிறைத் திங்களும் உள்ள சடை முடியையும் நெற்றிக்கண்ணையும் கொண்ட நச்சுக் கறைக் கழுத்தனுகிய சிவபெருமான் எழுந்தருளி யிருக்கும் இடமாயும்; அகன்ற திருமார்பினையுடைய அடிகளாகிய சிவபெருமான் வீற்றிருக்கும் இடமாயும்; தீ வடிவினனான சிவபெருமான் திருக்கோயில் கொண்டிருக்கும் இடமாயும்; தீமை மிகுந்த பழமலமென்னும் பகை உயிர்களை விட்டு நீங்கி யொழியும் இடமாயும்; பேரின்பம் தலைக்கூடும் இடமாயும் உவ்வளது அருட்புகழ் மிக்க திருக்கச்சியனேகதங்காவத மென்னுந் திருப்பதி'.

என்று உரை கூறிக் கொள்க.

இடை ஏழனுருபு. குயிலிசைக்கு ஏற்ப மயிலாடுமென்க. கடி, இங்கு மிகுதிப் பொருளில் வந்தது. 'கடிப்புனல்' என்று கந்தபுராணத்திலும் (தாரக, ௩௬) இது மிகுதிப் பொருளிற் புனலுக்கு வந்திருத்தல் கண்டு கொள்க. சினங்கொண்டு பொங்கிப் பெருக்கெடுத்து வரும் நீர் வெள்ளத்தைச் சிவபெருமான் தமது முடிச்சடைக்கண் தாங்கினமையால், இங்குப் புனலைக் 'கடிகொள் புனல்' என்று கிளந்தார். நுதல், இங்கு நுதற்கண்; என்னை? சிவபெருமானுக்கு வெறும் நுதலைச் சிறப்பித்தற்கு ஏதும் இயைபின்மையாலும், அவர் நெற்றிக்குள்ள சிறப்பெல்லாம் அந் நெற்றிக்கண் உள்ள கண்ணின் கண்ணதே யாதலாலும் என்பது. எனவே 'நுதல்' ஆகுபெயராம். திரு; சிறப்பு; அதாவது இங்குப் பேரின்பம். கலி-புகழ்; 'கலிக்கச்சி' யென்று இவர் கூறினாற் போலவே, 'கலிமதுரை' (திருவாசகம், திருவம்மானை, அ என்று இப்பொருள் கொண்டு மாணிக்கவாசகப் பெருமானுங் கூறுதல் காண்க. 'உள்ளது' என்றொன்று இசை யெச்சமாக வருவிக்க. 'கண்டன், அடி

கள், அழல் வண்ணன்' என்று சிவபெருமானையே பின்னும் பின்னுங் கிளந்தார்; இங்ஙனம் ஒரு பொருளையே பின்னும் பின்னும் அடுக்கிக் கூறும் அழகினைப் 'பொருட்பின்வருநிலை யணி' யென்பர் இலக்கண வாசிரியன்மார்.

திருக்கச்சியனேகதங் காவதமென்னுந் திருப்பதி நெஞ்ச ஒருமை யடைதற்குரிய இயற்கை வளங்களும், அன்பைப் பெருக்கிப் பழைய வினையை யறுத்தற்குரிய சிவபிரான் திருக்கோயிலும் அமைந்த இடமா யிருத்தலின், ஆங்குச் சென்று உள்ள ஒருமையும் அன்புப் பெருமை யும் பெறுகின்றவர்கட்கு ஆணவ மலம் முதலாயின நீங்கிப் பேரின்பந் தலைக்கூடுமென்பது இதன் கருத்து.

சிவபிரான்றன் திருக்கோயிலும் இயற்கை வளங்களும் ஒருங் கமைந்த இடம், இறைவனது அருள் நினைவை யெழுப்பி அதனொடு மக்கள் உயிரைப் படிவித்து அவ்வண்ணமாக்கு முகத்தால் வினை யொழிவு செய்து பேரின்பம் விளைக்குமென்பது இதன் நுண்பொருள்.

நீநாளு நன்னெஞ்சே நினைகண்டா யாரறிவார்
சாநாளும் வாழ்நாளுஞ் சாய்க்காட்டெம் பெருமாற்கே
பூநாளுந் தலைசுமப்பப் புகழ்நாமஞ் செவிகேட்ப
நாநாளு நவின்றேத்தப் பெறலாமே நல்வினையே.

சம்பந்தர்.

கண்டாய் - முன்னிலையசை. சாய்க்காடு - ஒரு திருப்பதி; 'யார் அறிவார் சாநாளும் வாழ்நாளும்' என்றது, சாய்க்காட்டெம்பெருமான் முதலும் ஈறும் இல்லாதவன் என்றற்கு. புகழ்நாமம் - புகழ்மிக்க நாமம். 'சுமப்ப கேட்ப ஏத்த நல்வினை பெறலாமே' என்க.

---

## நம் 'செந்தமிழ்ச் செல்வி'யின் ஏழாஞ் சிலம்பு

நேற்று மார்கழித் திங்கள் ஈறான கடந்த ஆறும் ஆண்டிலே நமது அருமைச் 'செல்வி' ஆறும் சிலம்பு பெற்றுத் தமிழ் மக்களின் உள்ளமலர் அமர்ந்து திருநடஞ் செய்து செந்தமிழ்த் தொண்டாற் றித் தன்கடன் இறுத்த திறம் கையொப்ப நண்பர்களும் பிறரும் அறிந்ததொன்று. இத் தைத் திங்கள் பிறந்ததும் ஏழாஞ் சிலம்பினை மிக்க ஊக்கத்துடன் பெற்றுக் கொண்டது.

நமது 'செல்வி' கடந்த இரண்டு மூன்று ஆண்டுகளாக ஆண்டு தோறும் உயர்வடைந்து வருகின்றமையைத் தமிழ் நன்மக்கள் உற்று நோக்கி மகிழ்தல் வேண்டும். நான்காம் ஆண்டில், நம் 'செல்வி' நாற்பத்தெட்டு பக்கங்கள் கொண்டிருந்தது. ஐந்தாம் ஆண்டில், திடீரென்று மேலொரு பதினாறு பக்கங்கள் கூடப்பெற்று அறுபத்து நான்கு பக்கங்களாக மேலோங்கிற்று. அதுமட்டு மன்றிப் பழந் தமிழ் மக்களின் சீரிய பழக்க வழக்கங்களின் விளக்கங்களை விளக் கப் படங்களுடன் ஒவ்வோ ரிதழின் இறுதியிலும் மேற்கொண்டு மிளிர்ந்தது. ஆறும் ஆண்டில், கடவுள் வணக்கத் தேவாரப்பாட்டுத் திங்கள் தோறும் வெவ்வேறு தேவாரங்களாய்ப் பலவானதோடு அவற்றிற் கெல்லாம் தெளிவான உரைகளும் எழுதப் பெற்றது. அவ் வுரைகள்தாமும் உரையிலக்கியத்திற்கு ஓர் ஆக்கமாகப் பல் வேறு முறைகளிலும் எழுதி எடுத்துக் காட்டிற்று. ஆறும் ஆண் டில் மற்றுமோர் அரும்பெருஞ் சிறப்பினாலும் 'செல்வி' உயர்வடைந் தது. முன் ஆண்டில் ஏற்றுவந்த வரி விளக்கப் படங்களெல்லாம் (Line-Blocks) ஆறும் ஆண்டிற் பூச்சு விளக்கப்படங்களாக (Half-Tone-Blocks) அழகிதாய் ஏற்று வந்தது. விளக்கக் கட்டுரை களும் முன் பின் தொடர்பின்றித் தனித்தனிப் பொருள்கள் பற்றி முன்னிருந்ததுபோ லல்லாமல், தமிழ் மக்களின் பழக்க வழக்கங் களில் முதன்மையானதும் நுட்பமானதுமான அகப்பொருட் பழக் கத்தை யெடுத்து அதனைப் பன்னிரண்டு பகுதிகளாகப் பகுத்துக் கொண்டு ஒவ்வொன்றையும் ஒவ்வோ ரிதழிலும் எளிய செழுந் தமிழ் நடையிற்கொண்டு பெரும்பயன் காட்டி விளங்கிற்று. வேறு பல அருந்தமிழ்க் கட்டுரைகளும் பலப்பல தலைப்புகளின்கீழ்ப் பகுதி பகுதியாக இதழ்தோறும் அறிஞர்கள்பால் திரட்டி வந்தது. 'செல் வி'யின் ஆறும் ஆண்டுச் சிறப்புக்கள் பலவற்றில் இன்னொன்றும் இங்குக் குறிக்கற்பாலது. அது, பெரும்பாலும் 'செல்வி' பிறமொ ழிக் கலப்பில்லாத தனிச் செந்தமிழ் நடையிலேயே பயின்று திகழ்ந் தமையாகும்!

இனி இவ்வேழாம் ஆண்டில் நம் 'செந்தமிழ்ச் செல்வி' அடை யும் வளர்ச்சிகள் பின் வருமாறு :

கடந்த ஆண்டுகளிற் போலக் கடவுள் வணக்கத் தேவாரப்

பாட்டுகள் ஒன்றேயாயில்லாமல், இவ்வாண்டில் ஒவ்வோ ரிதழிலும் ஒன்றுக்கு மேற்பட்ட பல பாடல்கள் உரையுடன் விளங்கும்.

முன் ஆண்டில் வெளிவந்த அகப்பொருட் கருத்துக்களுக்கு இனமான புறப்பொருட் கருத்துக்கள் இவ்வாண்டில் அவை தம்மின் பன்னிரண்டு விளக்கப் படங்களோடும் (Half-Tone) பன்னிரண்டு ஆராய்ச்சிக் கட்டுரைகளாக இதழ்தோறும் வெளிப்படும்.

சமயத் தொடர்பாகவும் மொழித் தொடர்பாகவும் பிற உண்மைத் தொடர்பாகவும் மேனாட்டு மக்கள் காணும் அரிய புதுக் கருத்துக்களிலும், ஓராசிரியரின் கருத்தெடுத்துப் பன்னிரண்டு பகுதிகளாக்கிப் பன்னீரிதழ்களிலும் ஆங்கிலத்தினின்றும் மொழி பெயர்த்து வெளியிடப்படும்.

இவ்வாண்டிற் புதுக்கதையும் (Novel) கதையிலக்கியத்துக்குக் காட்டான முறையில் வெளிவரும்.

ஏனைய கட்டுரைகளும் முன்னாண்டினுஞ் சிறந்து தோன்றும். இந்தச் சிலம்பிலே குறியீட்டுச் சொற்கள் நீங்கலாக ஏனைப் பிற மொழிச் சொற்கள் தமிழில் விரவாதவாறு மிகவுங் கருத்தூன்றப் படும்.

இனைய நலங்கள் கொண்டு 'செல்வி' இவ்வேழாம் ஆண்டில் வீறுற்றுத் திகழும். 'செல்வி' இவ்வாறெல்லாம் ஆண்டு தோறும் மேலோங்கி வளர்ந்து தமிழ்த்தொண்டு ஆற்றுதற்குச் 'செல்வச் செவிலி' மிகவும் இன்றியமையாது வேண்டப்படுகின்றனள். பொருளில்லாமல் ஏதொன்றையும், அஃது அரியதே யாயினும் அல்லது எளியதே யாயினும் இவ்வுலகிற் சிறிதுமே செய்தலியலா தென்பது எவர்க்குந் தெரியாத தொன்றன்று. கடந்த இரண்டாண்டுகளிலும் 'செல்வி'யை உயர்வாக்கிய முறையாற் செலவும் மிகுதியாய் விட்டது. அதற்காகக் 'கையொப்ப நண்பர்கள்' எல்லாரையும் திரும்பிப் பார்த்ததிற், சிலரே முகங்கொடுத்து வேறு கையொப்ப நண்பர்கள் சிலரைச் சேர்த்துதவினர். அவர்கட்கு யாங்கள் மிகவுங் கடமைப் படுகின்றோம். ஆயினும் எதிர்பார்த்த கையொப்பங்கள் சேராமை

யாற் 'செல்வி' மேன்மேலும் உயர்ந்து நலம் விளைத்தற்கு இடமில்லாமல் தயங்குகின்றது.

என் செய்வது? கையொப்ப நண்பர்கள் தமிழ்நலங் கருதி இன்றே கருத்து வைத்தால் நாளையே தாம் தாம் ஒரு புதுக் கையொப்பமாளுனும் சேர்த்தனுப்பலாம். 'செல்வி'யின் மறு இதழும் மேலோங்கிப் பெருந் தொண்டு செய்யும். நம் அருமைச் 'செல்வி' ஆறு 'பாரங்'களாலான தொண்ணூற்றுறு பக்கங்கள் கொண்ட இதழாகவேனுந் திகழ்ந்து தக்க முறையில் தமிழ்க்குத் தொண்டாற்றல் வேண்டுமென்பது எங்கள் பேரவா. திருவருளாற் கையொப்ப நண்பர்களும் பிறரும் சிறிது முனைவார்களாக!

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

---

## உலகெங்கும் தமிழரிடமிருந்து நாகரிகம் பரவிய தென்பது.

[திரு. அ. சிதம்பரநாத னவர்கள்]

(சூ-ம் சிலம்பு, எகக-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆரியரின் மிகப்பழைய நூலெனக் கருதப்படும் இருக்கு வேதத்திலும் பாணரைப் பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அவர் கடலிலுங் காலிலுஞ் சென்று வாணிகஞ் செய்பவரென்றும், வகுப்பு வேற்றுமை பாராட்டாதவராயினும் ஆரியர் கொள்கைகளுக் குடன்படாதவரென்றுங் கூறப்பட்டிருக்கிறது. அவர் கடற்கரை யோரமாய் வாழ்ந்து வந்தவரென்றுங் குறிப்பிடப்பட் டிருக்கிறது. அவரை பாணீஸ் (Panis) என்று இருக்குவேதங் கூறும். மேல் நாட்டிலக்கியங்கள் அவரைப் பியூனிக் குழுவினர் (Punic race) என்று கூறுகின்றன. அவர்கள்தான் சிரியாவின் (Syria) பக்கத்தில் குடியேறிய பின்னர் பொனீஷியர்கள் (Phoenicians) என்றழைக்கப்பட்டனர்.

பாணர்கள் காந்தாரா கபூலிஸ்தான் வழியாக மேல் ஆசியாவிற்கும், போண்டஸ் (Pontus) மாகாணம் பாஸ்போரஸ் நிலவொ

டுக்கம் (Isthmus of Bosphorous) இவைகளின் வழியாக ஐரோப்பாவிற்கும் பல பிரிவுகளாகச் சென்றனர். காந்தாரா கபூலிஸ்தான் வழியாகச் சென்ற பாணர் கீழ அரேபியாக் கரையையும் பாபிலோனியாவையுந் தாண்டிச் சிரியாவின் வழியாய்ச் சென்று நிலை நாட்டிய நாட்டிற்குப் பொனீஷியா என்று பெயர். பாணருடைய நாடு பொனீஷியா எனப்பட்டது. பெர்சியன் குடாக் கரையிலிருந்தோர்கள் அவரைக் கடற்கடவுள் என்று நினைத்து வணங்கினர். பின்னும், பாணர் டைகிரிஸ், யூப்ரெட்டிஸ் (The Tigris and the Euphrates) ஆற்று முகப்புகளுக்கருகே குடியேறி நாகரீகமாகிய விளக்கை யேற்றினர். அவ்வாறேற்றப்பட்ட விளக்கிலிருந்து வட ஆசியாவெங்கு மொளி பரவிற்று. பாணர்கள் குடியேறுவதற்கு முன் பொனிஷியா லெபனுன் (Lebanon) என்ற பெயர் பெற்றிருந்தது. பொனிஷிய ரென்பவர் கிறித்து பிறப்பதற்கு முப்பதினாயிரமாண்டுகட்கு முற்பட்டவர் என்பது ஜூலியஸ் ஆப்ரிக் கானஸின் முடிவு. ஆகவே பாணர்கள் வரலாறு அதற்கு முற்பட்டதே என்று தெரியவரும்.

இதற்குள்ளாக நிலத்தினமைப்பு சிறிது மாறிற்று. பஞ்சாபிற்குத் தெற்கேயிருந்த கீழ்க்கடலும் அரசபட்டணத்தை யொட்டியிருந்த அரசபட்டணக் கடலும் "நாடு கடலாகும்; கடல் நாடாகும்" என்பதை யொட்டி மேடாயின. மரக்கல மோட்டப் பாணரிடம் கற்றுக் கொண்டும் போதிய மரமில்லாததால் கடல் கடக்க முடியாதிருந்த ஆரியர்க்கு இப்பொழுது தென்னாடு நோக்கிப் போக முடிந்தது. ஆதலால் தமிழரது நாகரீகத்தைக் கற்றுக் கொண்டு மென்மேலும் பெருக்குவதற்கு எளிதினவரால் முடிந்தது. சோழ மண்டலக் கரையிலிருந்த தமிழர் வடநாடு போந்த கடற் பாணரை யொத்த நாகரீகத்தினர். அச்சோழர்கள் பாணருடன் சென்று ஒரு நாட்டிற் குடியேறினர். அக்குடியேற்ற நாட்டிற்குச் சோழநாடு அல்லது சால்டியா (Chaldea) என்று பெயர். அந்நாட்டையே ஷைனர் நாடென்றும் (Shinar Land) பாபிலோனியா வென்றுங் கூறுப. அங்குக் குடியேறியவர்க்குச் சுமேரியர் (Sumerians) என்ற வேறு பெயருமுண்டு. பாபிலோனியாவிலேயே சுமேரியர் பிறந்தவர் என்று கூறுவதற்கு அந்நாட்டு மண்ணும் நிலமு-

மிடந்தரா. சாலிதியாவிலுள்ள டெல்லா (Telloh) என்ற விடத்திலிருந்து அகப்பட்டுள்ள சில உருவங்களின் தலைகள் தமிழரின் தலைகளை ஒத்திருக்கின்றன. தமிழரது மொழியைப் போன்றே சுமேரியரது மொழியு மொட்டுச் சொற்களை யுடையது. அச் சுமேரியர் தான் பாபிலோனியாவிலும் அசிரியாவிலும் நாகரீகத்தை வளர்த்தோராவர். இருக்கு வேதத்தில் சந்தன மரத்தைக் குறித்து யாதொரு குறிப்புங் காணப்படாததாலும், சந்தன மரம் மலையாளக் கரையின் தனிப் பொருளாகையாலும் பாபிலோனியோ இலக்கியங்களிற் காணப்படும் சந்தனம் தமிழராகிய சாலிதியராலேதான் கொண்டு போகப்பட்ட தென்று நினைக்க இடமுண்டு. மொழி பற்றிய இலக்கணமும் மண்டையோடு பற்றிய செய்திகளும் தமிழர்க்குஞ் சுமேரியர்க்குமுள்ள தொடர்ச்சியை வலியுறுத்துகின்றன. பாபிலோனியாவிலும் பாம்பைத் தெய்வமாகக் கொண்டாடுவதினின்று அத்தொடர்ச்சி யுண்மை பசுமரத்தாணியாகின்றது. சோழர்கள் சாலிதியர்க்குச் சிற்ப வேலைகளைக் கற்பித்தனர். தென்னிந்தியாவிலிருந்து சென்ற சேத்துகள் அல்லது சிரேஷ்டிகள் (Seths or Shrestis) என்போரே சாலிதியாவில் சேட்டுகள் (Saits) என்றழைக்கப்பட்டனர். அச் சேட்டுகளின்றேல் சாலிதியாவில் கலைப் பெருக் கெள்ளளவு மிருந்திரா தென்பது திண்ணம். மெஸப்பொட்டேமியாவிலெழுந்த இந்தச் சாலிதியரின் நாகரீகம் பதினுயிரமாண்டுகட்கு முற்பட்ட தென்ப.

பாண்டியர்கள் பெர்சியா அரேபியா வழியாகச் சென்று எகிப்தில் (Egypt) குடியேறினர். அவர் பண்டுநாட்டிலிருந்து (Land of Punt) வந்ததாக அந்நாட்டு வரலாற்றிலுங் கூறப்பட்டுளது. பண்டுநா டென்பது பாண்டிய நாடாகிய தமிழ் நாடே. எகிப்தியருடையவும் தமிழருடையவும் மண்டை-யோடுகள் ஒத்திருப்பதே போதிய சான்று. தமிழரைப் போலவே எகிப்தியரும் ஒவ்வொரு திங்களிலும் மலக்கழிவு மருந்தருந்தினர். பெரியோரை வணங்குதல் இருபாலாரிடத்துமுண்டு. உயிரினழிவிலாத் தன்மையில் இருபாலார்க்கும் நன்னம்பிக்கை யுண்டு. துன்பக் காலத்திலும் பிரிவாற்றுமை நிகழ்ந்துழியும் தலைமயிரைக் களையாது வளரவிடும் வழக்கமிருவரிடமு முண்டு. அம்மை அப்பன் என்ற பகுப்பு எகிப்தியரிடமு

முண்டு. புறவழுக்கு மிகுந்த உயிரென்று பன்றி தமிழராலு மெகிப்தியராலும் பன்னாளாக இகழப்பட்டு வருகிறது. இவையெல்லாம் எகிப்தியருக்கும் தமிழருக்குமுள்ள புணர்ச்சி யுண்மையைக் காட்டுகின்றன.

இவ்வாறு தமிழராகிய பாண்டியரின் தொடர்பால் வந்த எகிப்தியருடைய நாகரிகமே உலகிற் பெரும்பாலும் பரவிற்று. எகிப்தியர் நாகரீகமே முதலிலெழுந்த தென்று சிலரும் பாபிலோனியரின் நாகரீகமே முற்பட்ட தென்று சிலரும் கூறி வாதிப்பர். அவ்விருவர் நாகரீகமும் தமிழரான் வந்ததே யன்றி வேறல்ல வென்பது பாண்டியர் குடியேறிய நாடே எகிப்தென்றும், சோழர் குடியேறிய நாடே சாலிதியா வென்றும், சாலிதியர் குடியேறிய மெஸப்பொட்டோமியாவாகிய நாடே பாபிலோனியா வென்றும் வழங்கப்பட்டன என்று முற்கூறிப் போந்தவாற்றால் விளங்காநிற்கும். பாணருடைய நாடே பொனீஷியா வென்றும் மேலே கூறப்பட்டது. இவ்வெகிப்தியரும் பாபிலோனியரும் பொனீஷியருமே கிரேக்கருக்கு நாகரீகங் கற்பித்தவர். கிரேக்கருக்குக் கற்பிக்கப்பட்டதைக் கிரேக்கரிடமிருந்து உரோமர் அறிந்தனர். பின்னர், உரோமர் தாங் கற்றுக் கொண்டதை ஐபீரியர், கெல்த்கள், தியூதர்கள், சிலேவர்கள் (Iberians, Celts, Teutons, and the Slavs) முதலானோர்க்குத் தெரிவித்தனர். இவ்வாறே உலகெங்கும் தமிழரிடமிருந்து நாகரீகம் பரவிற்று.

உலகெங்கும் நாகரீகம் பரவுவதற்கு அடிப்படையாக வேண்டப்படுவன யாவுந் தமிழரிட மிருந்தனவென்று முன்னரே கூறப்பட்டது. தமிழர்தான் உலகில் முதலிற்றோன்றித் தழைத்தவர் என்றும், அவர் வேளாண்மை, வாணிபம், மந்திரம், கடற்றுண்டல், சிற்ப வேலை இவைகளிற் சிறந்தவ ரென்றும், படைக்கப்பட்ட பொருள்களிலிருந்து படைத்தவரைப் பற்றிய நினைப்பு அவருக்குண்டாயிற் றென்றும் மேலே கூறப்பட்டது. தமிழரின் பாலளித்தல் நெய்சொரிதற் செய்திகளினின்று பிறந்ததே ஆரியரின் வேள்வி என்பதும் முன்னரே சொல்லப்பட்டது. பண்டைத் தமிழர் நெசவு வேலையிலுந் தச்சு வேலையிலுஞ் சிறந்தவ ரென்றுந் தெரிகிறது.

பால் தயிர் முதலியவற்றைக் கொட்டி வைக்கக் கூடிய தோற்பைக ளவரிட முண்டென்றும் தெரிகிறது. பாணர்தான் சங்கான் வந்த அணிகளை முதன்முத லணிந்துகொண்டோராவர். அவ்வணிகளை யணியும் வழக்கத்திலிருந்தே பிறவணிகளை யணியும் வழக்கம் பிறந் தது. ஆகவே, உலகினர் வேளாண்மை, நீர்ப் பாய்ச்சல், சிற்ப வேலை, மரக்கல மோட்டல், நெசவுவேலை, தச்சுவேலை, அணிவேலை, வேள்வி, கடவுள் வணக்கம் முதலியவற்றைப் பண்டைத் தமிழரிட மிருந்து அறிந்துகொண்டன ரென்பது விளங்கும். இத்தகைய சிறப்பு வாய்ந்த தமிழரின் வரலாறு பேரிருளான் மூடப்பட்டிருக்கிறது. இதற்கு எண்ணிலாக் கடல்கோள்களும் கணக்கிலாக் கனலெழுச்சி களுமே ஏதுவாகும். கறைபான், செல் முதலிய பூச்சிகளும் தமிழர் தம் நூல்களைக் கொள்ளை கொண்டன. ஆதலாற்றான் தமிழரது பழைய வரலாற்றை எழுத முற்படுவோர் முட்டுறுகின்றனர். தமிழ ரது பழமைத் தன்மையை வெளிப்படுத்த அவர்க்குதவியா யிருப் பது பிறநாட்டுப் பிறமொழி நூல்களே யாம். அந்நூல்களில் தமிழ ரைப் பற்றிய குறிப்புகள் சிலவாகவேயுள. ஆதலால், அச்சிறு குறிப் புக்களையும் நம்மறிவையும் ஒன்றுக் கொன்று துணையாகக் கொண்டு தமிழரது பழமைத் தன்மையை விளக்க வேண்டியதா யிருக்கிறது. அவ்வழி பற்றியேதான் இக் கட்டுரையும் வெளி வருகிறதென்க.

---

# புகழேந்தி—செந்தமிழ் நாடகம்

[திரு. அ. நடராஜ பிள்ளையவர்கள்]

(கூ-ஞ்சிலம்பு; எஙங-ம் பக்கத் தொடர்ச்சி)

## இரண்டாவதங்கம்—முதற்காட்சி.

**இடம்**—உறையூர் வெளியிலொருசார்,

**காலம்**—அதிகாலை,

**நடர்**—புகழேந்தி, மணிவணன்.

(இருவரு நடந்துகொண்டிருக்க)

(நேரிசை யாசிரியப்பா)

**மணிவணன்:**—வெண்பாச் செய்யுளின் மிகுதிறற் படைத்த
கண்போற் புலவீர்! காலமோ வைகறை

யாமெனத் துணிய வடுத்தது புலரி
கீழ்த்திசை நோக்குமின்! கெடலரு பகலவன்
கேழ்கிளர் கதிர்சில மேற்றிசை நிலவொளி
கலந்துடன் கொம்மைசெய் காரிருட் படாத்தில்
நலந்திகழ் குறுக்கிழை நடப்பன போன்று
செல்வதைக் காண்மின்!

**புகழேந்தி:—**

கண்டோம் செல்மதி
புற்பனை யிரண்டி னுபரம் பொருந்திட
நிற்பதால், உவாமதி நெருநலே யாகலான்
வைகறை புகுந்திடல் வழக்கே.

**மணிவணன் :—** பெரியீர்!

தைவக் குறுமுனி தண்ணீர்க் கரகமாங்
குடகுநின் றிழிந்து குதித்துச் சென்றே
யிடம்படு குறிஞ்சி யெங்குந் திரிந்து
தடம்பணை தவழ்ந்து குளம்பல தங்கி,
சோழமா நாடு சோறுடைத் தெனப்பைங்
கூழினை மிகுத்திடச் செய்தவிக் காவிரிக்
கரையா மோட்டினிற் காலைக் கடனை
முறையே கழித்து முறுக்கவிழ் தாமரை
நண்பணைக் குணதிசை நல்முறக் கண்டே
யண்மையா முறையூ ரடைகுவம் முன்னர்ப்
போகும் படைகளும் புகுங்கோட்டை வாயில்
வெளியே நிற்க விதித்தனன்; கண்டீர்!

**புகழேந்தி :—**

ஆமாம்; அறிந்தேம். அவ்வணஞ் செய்குவம்.
தேமாங் கனியெனத் திகழ்ந்திடு குடமதிச்
சோரனே டாடிய தொல்லிரு ணங்கை
வீரனு மெல்லோன் வரவினன் முகவெளுத்
திட்டா ளென்னக் கீழ்த்திசை வெளுக்கு
நேர்த்திகண் டிடுவீர்!

**மணிவண்ணன் :—**

பார்த்தனன், நிகரில்
தொல்காப் பியனே தோன்றினன் மீண்டெனப்
பல்காற் புகழ்ந்திடு பண்புடைப் புலவீர்!
உடுத்திரள் யாவையு மொவ்வொன் ருக
மடுத்திடு வெண்கதிர் வன்மையை நோக்குமின்!
திங்களங் கதிராற் றேய்வுருத் தாரகை
கொங்கணி கமலக் கொண்கனின் கதிரான்
மாண்டிடு செயலின் மாட்சிதா னென்னே!

**புகழேந்தி :—**

மாண்டிடு முலக மாப்பொருட் டன்மையைக்
கண்டிட விழையுங் காட்சிசா லறிவைக்
கொண்டிடு மன்பீர்! கூறுமிப் பகலவன்
கதிரின் வெம்மையே சுட்புல நுண்மையைக்
கொதித்திடச் செய்து மறைத்திட லாகவும்,
மதிக்கதிர் தட்ப மருவலான் மீன்றிரள்
தோன்றவு மாயின. அதோகாண்! அருணன்
தோன்றினன். இந்திரன் றெல்திசை முழுதுஞ்
சிவந்ததைக் காண்மின், செருக்கள மானவே.

**மணிவண்ணன் :—**

சரி, சரி, புலவீர்! சார்ந்தனன் ஞாயிறு;
செஞ்ஞாயி றென்ற செய்தியு மறிந்தனன்.
ஆனல், உச்சியி லகன்றிடு காலை
யானு வெண்ணிற மடைதலு மேனே?
ஆனப் பெரும்புக ழமைந்திடு புலவீர்!

**புகழேந்தி :—**

நுண்மதி யுடையீர்! நுவன்றிடல் கேட்குதிர்
கண்மணி யனையவிப் பகலவன் கதிர்கள்
செம்மை, பொன்மை, பசுமை, கருமை
கபிலம், பிங்கலம், நீலம் எனவெழு
திறத்தவாம், அவைகளே செந்தமிழ்ப் புலவரும்

வடமொழி யாளரும் வாம்பசும் புரவியாய்
வழங்கிட நின்றன, வகையா ரக்கதிர்
கொண்டிடு நாயகன் குறிக்கொளுந் தன்னையே
விண்டொடச் சுற்றியே விரைந்தே குதலால்,
எழுவகைக் கதிர்களு மிணைந்தே தம்மிற்
கெழுமிய வெண்மையைக் கிளர்ந்திடச் செய்யும்.
மேற்றிசை கீழ்த்திசை மேவிடு காலை
செம்மை நிறங்கொளல் தெறுகதிர்க் கொடுமை
வெம்மை நீங்கிட மேதினிப் பரப்பிற்
சாய்ந்தே யக்கதிர் தவழ்ந்திட லாலும்,
வானப் பரப்பெலா நீனிற மயங்கிக்
கட்புலந் தட்பங் கண்டிட லாலும்
வெண்மைபோய்க் கபிலைத் தோற்றமு மாமே.

மணிவண்ணன் :—
ஆயின், வெண்ணிறஞ் செயற்கையோ? பன்னிறக்
கதிர்களின் ரூயாப் கவினுறு மியற்கை
யிலையோ?

புகழேந்தி :—
இலையது செயற்கையே கூறிய
காட்டாந் தாயையே கருதுவம் ; மக்களைத்
தருதலிற் சேயினு முதலாம். ஆயினும்,
கருவுறல், சமைதல் முதலாங் காரியம்
நாடிடில் செயற்கையாம். அதுபோல் வெண்ணிறம்
பன்னிறக் கூட்டான் வந்தது. பகலவன்
உதயமா கிரியி லுறைந்திடு மதுவும்,
சதையநா யகனுந் தண்மதித் தூயோன்
மேற்றிசை பொருப்பனை யுயரமே னிற்பதும்,
அவியுண வினுமே லாகிய தென்றுசொல்
செவியுண வொன்றையே தேடுஞ் சீரியீர்!
காலை யென்னுங் கவின்பொற் கொல்லன்
வேலையா நீனிறப் பட்டுடை மேதினிப்

பூவையின் யாப்பகம் பூணுபொற் காசு
மாலையொன் றியற்றிட வளமார் கீழ்த்திசை
மலைபாம் பட்டடை வளர்செஞ்ஞா யிற்றை
பொறியாங் கதிர்கள் போயிட யாங்கணு
மதியாஞ் சமட்டி வாங்கியே தாக்கி
மீண்டு மோங்கியே வினைசெயன் மானல்
காண்டு மன்றோ? மதியிற் களங்கம்
கருவியின் பழமையும் காலையின் பன்மையுங்
குறிக்கும். உதயக் கொழுங்கிரிக் கப்பாற்
பாந்திடு பரவை பகர்நெருப் பாகும்.
அன்றிப் பகலவ னுஞ்சிறு செல்வன்
குன்றும் மாளிகைக் குவடதி லேறி
நின்றே தன்கதிர்க் கயிற்று னிமிர்த்துக்
கட்டிய காற்று டியைமுன் னேக்கிச்
சென்றே வீழ்த்துஞ் செயல்போற் பைப்பைய
வெழும்பியே திங்களை மேற்றிசை யிறங்கிடச்
செயும்வே டிக்கையுந் தெரிக்கற் பாற்றே.

**மணிவணன்:—**

ஓ! கோ! இரண்டாங் கற்பனை யுள்ள
வாகா யமைந்து வரப்ததது வியப்பே!
பாகே யனையசொற் பைந்தமிழ்ப் புலவீர்!
கதிரவன் கீழ்த்திசை கடந்துமே லேறவும்
சிறிதாய் மாறுஞ் செய்தியென் தெரிப்பீர்.

**புகழேந்தி:—**

வல்லா னருளா னல்லறி வுற்ற
பொல்லா மணிவணப் புதுமையீர்! கேளீர்.
சிறந்திடு வயிரச் செழுமணி பொன்றினைத்
திறந்திடு வெளியிற் சேர்த்தே கண்டாற்
சிறுத்தே காணலுந் திகழ்ந்திடு செம்மணி
யகத்தே வைத்துக் கண்டா லம்மணி
திகழ்ந்தே சற்றுச் சிறப்பாய்த் தோன்றலும்

புரைபக் கதிரவன் பூமியின் பக்கலைச்
சார்ந்திடு காலஞ் சற்றுப் பெரிதாய்த்
தேர்ந்திடச் செயலும், திகழுச் சியினிற்
போந்திடு காலம் பொள்ளெனச் சிறுத்துக்
காணலுங் கட்புலக் காட்சியின் கூறும்.
அன்றியுங் காலையி லருங்கண் ணோக்கம்
பகலவன் வெம்மைப் பாதிப் பின்றிக்
காணலின் பெரிதாய்க் காட்சியிற் பட்டும்,
நண்பகல் வெம்மையால், நன்கன நோக்கக்
கூடுத லின்றிக் குறைவாய்த் தோன்றியுங்
காணுத லியல்பாம்; கடக்களி றனையீர்!

**மணிவண்ணன் :—**

செந்தமிழ்க் கவியே! தெளிந்தனன், யாவும்.
வந்தனம்; தொந்தரை தந்தனன் மிகவும்.
செல்வோம், காவிரித் தெண்ணீ ராடி
வில்லு மீனமுந் தன்வயின் விளங்க
ஆடும் புலிக்கொடி யருகே பாவையர்
நேடும் பந்துங் கழங்குந் தூங்குஞ்
செல்லூர் கோட்டையாற் றிகழ்ந்திடு
நல்லூ ருறந்தை நற்பதி தனக்கே.

(இருவரும் போக)

(காட்சி முடிகிறது)

---

# மொழியும் மொழிபெயர்ப்பும்

[காழி. சிவ. கண்ணுசாமியவர்கள் பி. ஏ.]

நெஞ்சிடை நிகழும் நினைப்பினைப் பிறர் அறிய இயலுமாறு ஒரு குறிப்பிட்ட உருவமைத்து வெளியிடுதலே மொழியாகும். குறிப்பிட்ட ஓர் வகையானன்றி ஒவ்வொருவரும் தத்தம் கருத்துச் சென்றவழி நினைவை வெளியிட முயலுவரேல், அது பெருத்த

தோர் குழறுபடையாகுமேயன்றித் திருத்தமுற்ற மொழியாகாது. பல்லாற்றானும் பரந்த இவ்வுலகில் பற்பல காலத்தில் இடம் பெறும் மக்கட்குழாம் பலதிறப்பட்டதாகலின், அத்திறப்பட்ட மக்களனைவரும் தத்தம் நெஞ்சிடைபெழூஉம் நினைவுகளைத் தெரிவித்துக் கொள்ளுமாறு ஒருதலையாயவோர் குறியீட்டு மொழியையமைத்துக்கொள்ளுதல் என்பதூஉம், அதன்வழி அவர்களனைவருமேயன்றிப் பின்வருவோரும் நின்று மொழிந்து வருதலென்பதூஉம் இயல்பாகவே இயலாத தொன்றாகும். ஆயினும் குறிப்பிட்ட பகுதியாகிய ஒருநாட்டில் ஓரே காலத்தில் உடம்பெடுத்துள்ள ஒரு தொகுதி மக்கள் தம்முள் ஒரு சேர்ந்து ஒரு குறியீடமைத்து அதன்வழி நினைவுகட்கு உருவளித்து வருதல் அறிவினுக் கேற்ப எளிதாகும். இதுவே மொழித் தோற்றமாகும். இவ்வாறு தோற்றமுறும் மொழியமைப்பு அவ்வந்நாட்டு மக்கட் கேற்றவாறு பல்வேறுயமைந்து தனித்தனிப் பெயர் பெற்று நிலவி வருதலும் இயல்பே.

இனி, நினைப்பினுக்குக் குறிப்பிட்ட மொழிவழி உருவமைத்து வெளியாகுதல் எத்துணை யியலும் என்பதை யாராய்வாம். வெளித் தோற்றத்திற்கு நெஞ்சம் அல்லது அகம் என்ற ஒன்று கட்டுக் கோப்பான உடற் கோட்டத்தினுட் சிறைவைக்கப்பட்டதுபோலத் தோற்றினும் அந்நெஞ்சிடை நினைவுகட்கு எவ்வித கட்டுத் திட்டமும் கிடையாதென்பது ஒப்ப முடிந்ததோருண்மையாகும். எல்லையும் வரம்பும் வண்ணமுங் கடந்த ஒரு தனிப் பரம்பொருளுக்கு இன்னதுதான் உருவென்று அறிவினாலேனும் அமைத்துக் கூறுதல் எத்துணை யியலாததாகுமோ, அத்துணையே நெஞ்சத்தெழும் கட்டுத் திட்டமற்ற நினைவுகள் ஒவ்வொன்றினுக்கும் ஏற்றதோர் மொழி யுரு வமைத்தலும் இயலாததாகும். என்னை? நினைவு எல்லைக்கும் வரம்பினுக்கு முட்படாதது; மொழியோ ஒரு குறிப்பிட்ட எல்லைக்கும் வரம்பினுக்கு முட்பட்டது. எனவே காற்றைப் பிடித்துக் கரகத் தடைத்துக் காற்றின் உருவைக் கணிக்க முயறல் எத்துணை யெளிதோ அத்துணை யெளிதே ஒரு நினைவினுக்கு அதற்குரிய உருவமைத்தலுமாகும். இதனானன்றே,

"ஓர் புலவனது செய்யுள் நலம், அச்செய்யுளெழுதுங்கால் அவன் நெஞ்சத்தெழுந்த நினைவுத் தொகுதியின் பெரு நலத்திற்கு ஈடாகாது. அரும் பெருமாற்றலுள்ளடக்கிய, அழியா மாண்த்தாகிய ஆவியான உயிரினின்றெழுவதே நினைவு. இவ்வாறு வியத்தக்க மாண்புடன் எழுந்த ஒன்றை அழிதன் மாலைத்தாய புன்குரம்பையின் உறுப்புவழி, மக்கள் தஞ் சிற்றறிவிற் கெட்டியவாறு அமைத்துக்கொண்ட, குறுகிய குறையுற்ற மொழியென்னும் உருவமைத்து உள்ளவாறு வெளியிடுதல் ஒல்லுமோ?" என (மேரீ காரொலி என்ற) ஒரு ஆங்கிலப்பெண்ணறிஞர் திறம்பட மொழிந்தனர்? அன்றியும், "ஆ! என் நெஞ்சில் என்னென்னவோ ஒன்றின்மேலொன்றுய்க் கிளைத்தெழுகின்றன; அவற்றையெல்லாம் எவ்வாறு நீங்களறிய எடுத்து மொழிவதென்பது எனக்குத் தெரியவில்லை" என்றும், ஆணிப்பொன்னம்பலத்தே காணுங் காட்சி பொப்பதோர் காணற்கரிய காட்சியைக் கண்டுழி பொருவர் "ஆ! அதை யென்னென்று கூறுவேன்? எவ்வாறு எடுத்துரைப்பேன்? ஆயிரம் நாவைப்படைத்த 'ஆதிசேட'னு மாகாதெனின், என்னுல் முடியுமோ? முடியுமெனினும் மொழியுஞ் சாலாது" எனவும் வரூஉம் வழக்காறுகளாலும் நினைவின் அளப்பருந் தன்மையையும் மொழியின் குறையையும் எளிதில் உணரலாம். நினைவோ ஞாலத்தினும் பெரிது; (அதைக் குறிக்க வமைந்த) மொழியோ (அந்நினைவின் பரப்பு நோக்க) அணுவினுஞ் சிறியது. எனினும் உள்ளத்தெழுந்த கருத்துகளைப் பிறர்க்கெடுத் துரைக்க (குறுகியதும் குறைபாடுடையதுமான) ஒருமொழித் திரளேபேனும் அமைத்துக்கொள்ளாவழி மக்கள் வாழ்க்கை நடைபெறுதல் அரிதாகலின், அமைந்த ஒன்றன் வழி நினைவை இயன்றவாறு வெளியிட்டுப்போதல் இன்றியமையாததாயிற்று.

எனினும் மேற் கூறியாங்கு அவ்வந்நாட்டு மக்கட்பகுதியினர் தத்தமக் கியைந்ததோர் மொழியை முதற்கண் அமைத்துக் கொண்டகாலத்து அவரவர் தம் அறிவிற்கும் ஆற்றலுக்குமேற்றவாறே நினைவுக் குறியீடான மொழித்திரள்களை யமைத்துக் கொள்ளுதல் இயல்பாகும். மக்கள்தம் அறிவு ஒரே காலத்தில் ஒரு படித்தாய் யாண்டும் அமைந்துகிடத்தல் அரிதாகலின், இடத்

திற்கும் காலத்திற்கும், அறிவு முதிர்ச்சிக்கும் ஏற்றவாறு நினைவுக் குறியீடுகள் ஆங்காங்கு வேறுபட்டு அமைக்கப்படுதலும் இயல்பே. இதனாற் பற்பல நாடுகளிற் பற்பல காலத்தெழுந்த பல மொழிகளிலும் வேறுபாடும், நினைவைத் தெரிக்கும் ஆற்றல் நோக்கி ஏற்றத்தாழ்வும் நேர்வதாயிற்று. அன்றியும், கருத்துகளும் காலத்தானே வளர்ச்சியுறுதலும் புதுப்புது வழிச் சேறலும் இயல்பாதலானும் அப்புதியன புகுங்காலத்து அவற்றையும் பழைய மொழித்திரள் கொண்டே பண்பட எடுத்து மொழியும் ஆற்றலுள்ளடக்கி ஆன்றோரான் முதற்கண் தேர்ந்தமைக்கப்பட்ட மொழிகளே உயர்ந்தனவாகவும் ஏனையவை தாழ்ந்தனவாகவும், செம்மொழியென்றும், புன்மொழியென்றும் வேறுபடுவதாயிற்று. எனவே இத்தகைய எண்ணிறந்த வேறுபாட்டுக்களினிடையே, ஒருமொழியிலெழுந்த கருத்தொன்றை மற்றொரு மொழியில் கருத்து வேறுபாடின்றி ஏற்பப்பெயர்த்து மொழிதல் எத்துணை யரிதென்பது யாங் கூறாதே விளங்கும். இதனை

“அரியது கேட்கின் வரிவடி வேலோய்
அரிதரிது மாணுற நினைத்த லரிது
மாணுற நினைத்தகாலையு மாட்சியு நுட்பமு
மாழமுந் தோன்ற மொழிந்திட லரிது
ஆழந் தோன்ற மொழிந்த காலையும்
ஆட்சியின் மறுமொழி பெயர்த்தலு மரிதே”

எனக் கூறலாமன்றோ ?

இதுகாறுங் கூறியவாற்றால் நினைத்த ஒன்றை ஒருமொழியில் திறம்பட எடுத்து மொழிதல் எவ்வளவு அருமையபாமென்பதூஉம், அவ்வாறு மொழியப்பட்ட ஒன்றை மற்றொரு மொழியில் அதன் மாட்சியும் நுட்பமும் ஆழமுந் தோன்றும் நயம்படப் பெயர்த்து மொழிதல் எவ்வளவு அருமையினும் அருமை என்பதூஉம் சிற்றறிவிற் கெட்டியவாறு விளக்கப்பட்டது.

## மொழிபெயர்ப்பு

இனி மொழிபெயர்ப் பென்பதைப் பற்றி இரண்டொன்று கூறி முடிப்பாம்.

மொழி பெயர்த்துக் கூறுதல், மொழி மாற்று என்றும், மொழி பெயர்ப்பு என்றும் இருவகைப்படும்.

மொழிமாற்றல் என்பது எடுத்துக்கொண்ட ஒரு தொடரையோ, பகுதியையோ அதன்கண்ணுள்ள ஒவ்வொரு சொல்லளவானெடுத்து ஏற்றதோர் மறுமொழிச்சொல் அமைத்து மாற்றித் தருதலாகும். இம்முறையினுல் எடுத்துக்கொண்ட பொருளின் நுட்பமும் நயமுங் கெடாது மொழிமாற்றப் படுதல் அரிதினுமரிதாகும். கவைக்குதவா இம்முறை கடியப்படுதல் நேரிதே.

இனிமொழிபெயர்ப் பென்பதோவெனின், எடுத்துக்கொண்ட பொருளின் கருத்தும் நுட்பமும் நயமுந் தோன்றுமாறு ஏற்றவாறு கூட்டியுங் குறைத்தும், சுருக்கியும், விரித்தும் பெயர்த்தமைத்தலாகும். இதுவே உண்மையான மொழிபெயர்ப்பெனப்படும். அதிலும் எடுத்துக்கொண்ட பொருளின் அளவிற்கேற்ப அணியும் ஆற்றலும் செறிந்து விளங்க மொழிப் பெருமை நலிவுறாது, இருமொழிகளின் பெருநலந் தோன்ற, பெயர்த்து மொழிதலே சீரிதாம். இன்னும் இருமொழிக் கண்ணுமுள்ள ஆன்றோர் வாக்குகளின் கருத்தொப்புமை கண்டவிடத்து அதனை யெடுத்துக் காட்டியும், படிப்போர் எளிதில் உணருமாறு பழமொழியும், மேற்கோளும் இயைபப் பொருத்தியும் மொழி பெயர்த்தல் சிறந்த தொன்ருகும். “சூடாயிருக்கும்போதே இரும்பை யடித்துக் கொள்” என்று கூறுவது மொழிபெயர்ப்பேயாயினும் உண்மையில் மொழி மாற்றேயாகும்; “காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்” என்று கூறின் அது உண்மை மொழிபெயர்ப்பாய் உள்ளதுணர்த்தி நிற்கும்.

இனி மொழிபெயர்க்கப் புகுவானெருவன் இயன்றவரையில் தான் பெயர்க்கப் புகுந்த மொழியின் தூய்மை நலங்கெடாமல் காப்பதே சிறப்பாகும். “மணிப்பிரவாள” நடையொன்று வழங்கிற்ருலோவெனின் அது மொழிப் பற்றில்லா மாந்தர் இருமொழி கற்ற தம் பெருமை தெரிக்கப் பின்பற்றிய தாகுமாதலின், ‘அதை வேண்டேம்’ என விடுக்க. தமிழில் மொழி பெயர்க்கப் புகுந்து (தற்கால அரசாங்க சட்ட மொழி பெயர்ப்புகளைப்போல்) இடையிடையே

நபர், கமுனு, ஐவாப் என்பன போன்ற மகம்மதியச் சொற்களையும் டைம், கேட், நம்பர் என்பனபோன்ற ஆங்கிலச் சொற்களையும், சந்தோஷம், சாகரம், ஆஸ்பதம் என்பனபோன்ற ஆரியச் சொற்களையும் அரிசியில் கல் கலந்தாலொப்ப அளவு வரையின்றிக் கலந்து மொழிபெயர்த்துவிட்டால் அதைத் தமிழென்பதா, ஆங்கிலமென்பதா, ஆரியமென்பதா, என்னென்பது? ஆகவே இத்துறை குறிக்கொண்டு காத்தல் தமிழ் மொழிபெயர்ப்பாள ரொவ்வொருவருக்குந் தலைபாய கடனாகும்.

---

# சௌரமானச் சிறப்பு

[திரு. இ. மு. சுப்பிரமணிய பிள்ளையவர்கள்]

சௌரமானப்படி ரௌத்திரிஸு ஆவணி மாதத்திற் போட வேண்டுமென்று பெரியோர்கள் கேட்டுக்கொண்டபடி அப்பொழுதும் போட்டிருந்தேன். பலர் அனுட்டித்தார்கள், சிலர் அனுட்டிக்கவில்லை. அதுபற்றித் துண்டு விளம்பரமும் வெளியிட்டேன்.

குரோதனஸு மகா சிவராத்திரி தீபாவளி இவைமுன்னும் பின்னுமாக ஏற்பட, நான் அவற்றை உரிய காலத்திலேயே நடத்த வேண்டுமென்று துண்டு வெளியீடுகளை வெளிப்படுத்தினேன்.

ஷை வருடம் "அகில இந்திய ஆதிசைவ மகாசபையார் சைவப் பஞ்சாங்கத்திற் கண்டபடிதான் அனுட்டிக்கவேண்டுமென்று வெளியிட்ட அறிக்கைப்படி பலபட்டர்களும் அனுட்டித்தார்கள்."

---

குறிப்பு:—இஃது திருநெல்வேலி ஸ்ரீ காந்திமதி நெல்லையப்பர் கோவில் வசந்தமண்டபத்தில் 6-10-28ல் கூடிய சைவப்பொதுமக்கள் பெருங்கூட்டத்தில், பாளையங்கோட்டை, திருவாளர் வள்ளல் சிவஞான தேசிகர் அவர்கள் தலைமை ஏற்கச்சைவப்பஞ்சாங்கக் கணிதரும் நான்குநேரி போர்டு உயர்தர பாடசாலைத் தலைமைத் தமிழ்ப் பண்டிதருமான திருவாளர். இ. மு. சுப்பிரமணியபிள்ளை அவர்கள் செய்த சொற்பொழிவின்சாரமாகத் திருநெல்வேலி, புலவரகம் திருவாளர், பு.சி. புன்னைவனநாத முதலியார் அவர்களால் தொகுத்தெழுதப்பட்டது.

யாழ்ப்பாணம் வாணியாதீனப் பண்டாரசந்நிதியவர்கள் நவராத்திரி சஷ்டிகட்குரிய ஆகம ஆதரவுகள் எழுதியனுப்பினுர் கள். இந்த வருடமும் சதுர்த்தி, நவராத்திரி, சஷ்டி மூன்றும் மாறுபடக் கண்டேன். இதுவிஷயமாய் மதுரை ஸ்ரீமீனுட்சி சுந்த ரேஸ்வராலயஆகம சாஸ்திரபண்டிதர் திரு, கலியாணசுந்தரபட்டர் அவர்களைக் கோவிற்பட்டியிற் கண்டபொழுது கேட்டனன். அவர் கள் எட்டு வருடங்கட்கு முன்னரும் இப்படி வந்தது, நான் வேண்டிய ஆகம மேற்கோள்களை எடுத்துக்காட்டி ஆவணியில் ஆரம்பிததுப் புரட்டாசியில் நவமியை நடத்தும்படி செய்தேன் என்றுர்கள்! இதுபற்றிய விபவஹ பஞ்சாங்கத்தில் எச்சரிக்கை யும் கொடுத்திருக்கிறேன். சதுர்த்தி நவமி சஷ்டி ஆகிய மூன் றும் மாறுபட்டுவருவதை எச்சரிக்கையாகவும் கொடுத்தேன்.

இம்மா பெருங்கூட்டத்துக்குத் தலைமைபொருந்தும் திருவள் ளல் சிவஞானதேசிகர் அவர்கள் முதலில் சௌரமானம், சாந்திர மானம் என்பவற்றை விளக்கி யுரைக்கும்படி வேண்டிக்கொண் டமைக்கிணங்கிச் சௌரமானத்தை விளக்கப்படுத்துகின்றேன்.

விண்ணில் ஒளியுள்ள பொருள்களில் குறித்த எண்ணிக்கைக் குட்பட்ட சிலவற்றைத்தவிர மற்றவை விட்டுவிட்டு மின்னுகின் றன, சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, ஆகிய எழும் நிலைத்த ஒளியைத் தருபவை; இவை விட்டு விட்டு மின்னுமல் ஒளிர்கின்றன, விட்டுவிட்டு மின்னுகின்றவை நட்சத்திரங்கள் (நாள்கள்) என்றும், நிலைத்த ஒளியைத் தருபவை (7-ம்) கிரகங்கள் (கோள்கள்) என்றும் பெயர்பெறும்.

நட்சத்திரங்கள் ஒரேயிடத்தில் இருக்கின்றன, அசைவனவல்ல, அடையாளம் வைத்தால் அசையாதிருப்பது விளங்கும், சூரியன் சந்திரன் முதலியன அடையாளம் வைத்துப்பார்த்தால் அசைந்து செல்லக்காண்போம்.

ஏழு கிரகங்களையும் எடுத்துக் காலத்தை யளக்கும் கருவிக ளாக்கினர், நட்சத்திரத்துக்கு அடையாளத்தைவைத்து இன்ன இன்ன கிரகம் இன்ன இன்ன இடத்திலிருந்து இன்ன காலத்துள்

இன்ன இடத்துக்குவந்து சேர்கின்றதென்று கண்டுபிடித்தார்கள். எந்தக்கிரகமானது மாருமல் அதே கிரகத்தில் வருகிறதென்று பார்த்ததில் சூரியன்தான் ஒரு சுற்றில் ஒழுங்காக வருவதென்று கண்டார்கள், சூரியன் சுற்றிச்சுற்றி வருகின்ருன். மற்றைய ஆறு கிரகங்களின் பெயர்ச்சியை அறிய உச்சியில் அடையாளங்களைவைத்து எல்லைகளாகக் குறித்தார்கள். ஆகாயத்திலும் குறித்த நிலைகளைச் சில உருவங்களால் அமைக்கலானுர்கள். குதிரைத்தலை உருவத்தோடிருப்பதற்கு அசுபதி என்றும் அடுப்புக் கூட்டுப்போன்ற அடையாள உருவுக்கு அடுப்பு அல்லது பரணி என்றும் பெயர், இங்ஙனமே கார்த்திகை முதலிய எல்லைகளையும் தீர்மானித்துப் பெயருமிட்டார்கள்.

சூரியன் இன்ன எல்லையிலிருந்து இன்ன எல்லைக்குப்போக இவ்வளவு காலமென்று கண்டார்கள். பகலும் இரவும் கூடிய நாள் சூரியனுல் ஆகிறதென்று கொண்டு கால அளவையும் சூரியனைக் கொண்டே நிதானிக்கலானுர்கள், ஒரு நாள் 60 நாழிகையாகப் பகுக்கப்பட்டிருக்கிறது. அதாவது 24 மணி.

கிரகங்களில் சைவசமயம்போல் ராஜாங்கத்தில் அமர்ந்தது சூரியன், இதற்குக் கோளரசு என்று பெயர். சூரியனில்லையேல் மற்றக்கிரகங்களில்லை யென்பது நவீன ஆராய்ச்சியாளர் துணிபுமாகும். சூரியனை மத்தியஸ்தானமாகக் (நடுவிடம்) கொண்டு ஆறு கிரகங்களும் சுற்றி ஒளியைப்பெற்று வருகின்றன, என்பதும் துணிபு. ஆதலால் தான் **கோளரசு** என்க. கோள்களுக்குப் பிறப்பிடமும் அவற்றிற்கு ஒளிதந்து விளக்குவதும் சூரியனே. சூரியன் ஒளியில் எற்றத்தாழ்ச்சியில்லை. எப்பொழுதும் ஒன்றுபோன்றிருக்கின்ருன். சூரியன் ஒளி சந்திரன்மீது பட்டாலும் திரும்பித்திரும்பி வருகிறதன்மையால் ஒளி குறைந்தும் நிறைந்தும் மறைந்தும் போகின்ருன், பூமியிலுள்ள நாம் நடுவிலிருக்கச் சூரியன் ஒருபுறமும் சந்திரன் மற்ருெருபுறமுமாகச் சந்திரன் மேற்பட்ட முழு ஒளியும் நமக்குத் தெரியுங்காலமே **பூரணை**. சந்திரன் ஒரே நிலையில்லாமல் ஒளியில் ஏறித் தாழ்ந்திருக்கிருன்.

செவ்வாயும் முன்னே போய்க்கொண்டிருப்பான், பயந்து பின்னேக்கிச் செல்வான். சூரியன் காலில் அடிபட்டும், மறைந்தும்

போகின்றான், இங்ஙனமே மற்றைக்கிரகங்களும் சந்திரனும் மிகவும் அவஸ்தைப்படுகின்றான் (விடாத கைத்தட்டு)சாயாக்கிரகங்கள் நிழல் அளவின. பூமியின் நிழல் சந்திரன் மீது படியும்பொழுது சூரியன் ஒளி சந்திரன் மீது படாது செய்யும். அப்பொழுது சாயா நிழல் தோஷத்தில் மறைந்தேபோகின்றான். சூரியனுக்கு மிகக்கேவல மான நிலையில் பிறப்பட்டிருக்கின்றான் சந்திரன்.

விண்வட்டத் தொடக்கத்தில் சூரியன் ஓரிடத்திலிருந்து புறப் பட்டு அதேயிடத்தை யடைகிற சுற்று வழியிலுள்ள அடையாள எல்லைக் கற்களாகிய இருபத்தேழு நட்சத்திரங்களையும் வீட்டுக்கு இரண்டேகால் நட்சத்திரம் வீதம் பன்னிரண்டு பெரிய பிரிவுக ளாகிற வீட்டுக்குள் அடைக்கலானார்கள். சூரியன், அசுபதி பரணி கார்த்திகை கால் என்ற அளவில் முதலில் ஒரு வீட்டில் தங்குகின் றான். முதல் வீடு மேடம்; இம்முறையே மற்றப் பதினொரு வீடு களிலும் தங்கிச் செல்கின்றான். சூரியன் அந்தந்த வீடுகளில் தங்கு கின்ற கால அளவாகிய மாதமே மேடரவி முதலிய பன்னிரண்டா கச் சொல்லப்படும்.

சூரியன் சுற்றவில்லை. பூமிதான் சுற்றுகின்ற தென்பதை நம் முன்னோர்கள் அனாதி காலத்தே கண்டார்கள். பூமிதான் சூரியனைச் சுற்றி வருகின்றது. சூரியன் மேடமாகிய வீட்டிற் பிரவேசிக்கும் பொழுது அதற்கு ஏழாம் வீடாகிய துலாத்தில் முதலில் இருப் பது **சித்திரை.** ஆகவே சித்திரை என்ற பேரே மேடரவிக்குக் கொடுக்கப்பட்டது. சூரியன் ரிஷபத்தில் (இடபத்தில்) பிரவேசிக் கும் பொழுது அதன் 7-ம் வீடாகிய விருச்சிக முதலில் இருப்பது விசாகம், ஆகவே வைகாசி என்ற பேரே இடபரவிக்குக் கொடுக் கப் படுவதாயிற்று, இவ்விதமே மற்ற ரவிப் பெயர்களும், புனர் பூசம் பூசம் இவ்விரண்டின் பெயர்கள் பூசம் புனர்பூசம் என்றிருந் தன. **பூசம்-தை, பூசத்தைச் சேர்ந்தது புனர்பூசம்.** சூரியன் பிர வேசிக்கும்பொழுது அதற்கு 7-ம் வீடாகிய கடகத்தின் முதல் நட்சத்திரம் பூசம், அதன் பெயரே **தை** என்க.

நமது புண்ணிய பூமியாகிய பாத கண்டத்தில் பலபல காலத் தில் பலபல வகுப்பார்கள் வந்து குடியேறி யுள்ளார்கள். அப்படி

வந்தவர்களில் ஒரு சாரார் சூரியனது அரசாங்க நிலையை அறியாது பிறைக் கணக்கைக்கொண்டு காலம் கணிக்கலானார்கள். சந்திரனின் வளர்ச்சி தளர்ச்சி கொண்டு காலத்தைக் கண்டுவந்தார்கள். தங்கள் சாந்திரமானத்தைச் சௌர மானத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது சௌரமான முறை என்றும் மாறாதிருக்கின்றதைக் கண்ணுற்று அதன்படியே விரதங்களை அநுட்டிக்கப் பார்த்தார்கள். சாந்திரமான மாதமுறைமையைச் சௌரமான மாதமுறையோடு பொருத்தப் பார்த்தார்கள்.

அமாவாசை கழிந்த மறுநாள் சாந்திரமானப்படி மாதம் ஆரம்பமாம். சூரியன் தினத்துக்கு அறுபது நாழிகையே; மாறுதல் இல்லை. சந்திரன் மாதத்தில் ஏற்றத் தாழ்ச்சியுண்டு. திதியில் சந்திரனில் மாறுதல் உண்டு. மேடரவியில் வருகிற சாந்திரச் சித்திரையுடன் தம் மாதத்தை முடித்துக்கொள்ள வேண்டுமென்று கருதினார்கள். இப்படிப் பார்க்கும்பொழுது, ஒரு பங்குனியில் இரண்டு அமாவாசை ஏற்படலாயின. அதில், முதல் அமாவாசையோடு சாந்திரப் பங்குனியும், இரண்டாவது அமாவாசையுடன் சாந்திரச் சித்திரையும் முடிந்து போகின்றன. இதனால் தாங்கள் தங்களுடைய சந்திரமாதம் அதற்குரிய சௌர மாதத்தோடு சம்பந்தப் படவேண்டுமென்று செய்த ஏற்பாடு தடைப்படுகிறதாகக் கண்டார்கள். அத்தகைய மாதத்தைத் தள்ளிவிட வேண்டுமென்றும் அதனை அதிமாசம் என்றும் கூறலானார்கள். சித்திரை மாதத்துடன் சம்பந்தப்பட்ட அமாவாசையோடு முடிவதும் பங்குனி இரண்டாம் அமாவாசையோடு தொடங்குவதும் ஆகிய மாதத்தை நிஜமாசம் என்று கொண்டார்கள்.

சித்திரையுடன் சம்பந்தப்பட்டது **சைத்திரம்**, விசாகம் சம்பந்தப்பட்டது வைசாகம் அதாவது வைகாசி. ஆனியின் பெயரை மட்டும் கேட்டைபென மாற்றினார்கள். இதுவும் கேட்டையிலாய சேட்டையே. சௌரமானத்தின்படி விரதங்களை நடத்தவேண்டுமென்று கண்டவர்கள் சித்திரை அமாவாசைக்கு முன்வரும் விரதங்களைச் சைத்திர மாதத்தவையென்றும், சித்திரை அமாவாசைக்குப் பின்வரும் விரதங்களை வைசாக மாதத்தவையென்றும் பெயர்

வைத்துக் கொண்டார்கள். சில பிடிவாதக்காரர்கள் சௌரமானப் படி விரதங்களை அநுட்டிக்காது விலகினார்கள்.

### விநாயக சதுர்த்தி

இவ் விரதம் ஆவணித் திங்கள் வளர்பிறையில் நான்காம் நாளில் அநுட்டிக்கப் படுவது. சிலர் நட்சத்திரத்தையே பிரதான மாகக் கொள்ளவேண்டு மென்பர். நாம் திதியைப் பிரதானமாகக் கொண்டு விரதங்களை நடத்துகிறோம். உண்மையான பெரியோர்கள் சௌரமானத்தின்படியே விரதம் அநுட்டிக்க விரும்பினார்கள். நமக்குப் பிரமாணம் வேதம், ஆகமம், இவ்விரண்டும் பரமேஸ்வரனால் அருளிச் செய்யப்பட்டவை. ஆகமத்தில் விரதங்களைப் பற்றிய உறுதிப்பாடு உண்டு. தென்காசிச் சந்நிதிமடம் திரு சாமிநாதைபா அவர்கள் குறித்தனுப்பிய உத்தரகாரண ஆகம விதிகளாவன:—

பிரதமை முதல் அமாவாசை முடியச் சாந்திரமானம் ஆகும். மேடாதி ராசிகளில் சூரியன் சஞ்சரிப்பது சௌரமானம். விரதங்களைச் சௌரமானத்திற் கொள்க. சாந்திரமானத்திற் கொள்ளா தொழிக. பூர்வகாரண ஆகமத்திலும் சௌரமானமே விரதத்துக் குரியது என்றும், சாந்திரமானத்திற் செய்வது தோஷம், தேசமே அழியும் என்பன போன்றும், சைவர்கட்குச் சௌரமானமே விரதத்துக்கு உரியதென்றும், விதிகள் சொல்லப்பட்டிருக்கின்றன. இராமேஸ்வர தேவஸ்தான ஜோசியர் திரு. முத்துக்கருப்ப பிள்ளையவர்களும் காமிகாகமத்திலும் சௌரமானமே விரதத்துக் குரியது என்பதற்குரிய விதிகளைக் குறித் தனுப்பியுள்ளார்கள்.

பின்னர், சொற்பொழிவின் சுருக்கம் தெளிவுபடச் சொல்லப் பட்டதும் தலைவரவர்கள் அதிமாசம் மலமாசத்தைப் பற்றிச் சிறிது விளக்கும்படி கேட்டனர். அதற்கிணங்கப் பேசியதில், ஆவணிக்குச் சம்பந்தப்பட்ட அமாவாசை அடிபோடுபோவதால் அதிமாசம். சிலமாதம் 29 தேதியில் முடியும். சில மாதத்திற் பௌர்ணமி யில்லாமற் போகும். குறைந்த அளவையுள்ள மாதங்கள் பௌர்ணமி வரா மாதங்கள், இரண்டு பௌர்ணமி வரும் மாதங்கள் மலமாசம்.

# பெரியாரியல்பு

[திரு. கோ. வைத்தியலிங்கப் பிள்ளையவர்கள்]

(சா-ம் சிலம்பு சாறிகூ-ம் பக்கத் தொடர்ச்சி)

## பண்புடைமை

இனிப்; பண்புடைமை "பண்பெனப் படுவது பாடறிந் தொழுகல்" அதாவது ஒப்புர வொழுகுதலாம். ஒப்புர வொழுகுதலாவது பெரியா ரொழுக்கம் இதுவென உணர்ந்து அதனை மேற்கொள்ளுதல். "நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்—பண்பு பாராட்டும் உலகு" என்பதனானு முணர்க. நயம், நீதி, நன்றி, அறம் என்பன ஒரு பொருள். இனிப் பாடறிந்து ஒழுகுவார்மாட்டுப் பகைமையுள் வழியும் அஃதுளதாகாது. இனியவாய பண்புகளே யுளவாகும். பகையுள்ளும் பண்புள பாடறிவார்மாட்டு" என்பது மேற்கோள். 'நன்றாற்ற லுள்ளும் தவறுண் டவரவர்—பண்பறிந் தாற்றாக் கடை" என்றதனால் உயிர் வகைகளின் இயல்பெல்லாம் உணர்ந்து அதற்கேற்பத் தான் ஒழுகலென்றலும் பொருந்தும். ஒப்புரவு சான்றாண்மைகளில் தாம் வழுவாது நின்றே நல்லா ரியல்புகளும் அறிந்து ஒழுகுதலென்பது. ஈண்டுப் பாடென்பதனை உலகப் பொது உயிர்களது ஒழுக்கமெனவுங் கொள்க. எனவே; நல்லார், அல்லார் என்றிருவகை மக்கட் பொதுவர்களின் ஒழுக்கங்களை உணர்ந்து அதற்கேற்ப ஒழுகுதலும் பண்பென்ற வாறாயிற்று. பெரியோ ரொழுக்கினவொழுகியாரேனும் அவ் வொழுக்கத்தை உலகவியல் புணராது முயறலால் உலகம் அவரை ஒதுக்கும்; "ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை" யென்றதனுன் ஒழுக்கம் பாடறிந் தொழுகலாம். ஒப்புர வொழுகல் அவ் விருதிறத்துஞ் சார்ந்து நின்றமை யுணர்க. உலக நடையை அறிந்து அதற்கேற்ப ஒழுகாவிடில் வழக்க வொழுக்கங்கள் பெரும்பான்மை தீநெறிச் சார்பாகவே வருதலுண்மையின் அச் சார்புடையார் சிறு பான்மையதாகிய ஒழுக்க வுண்மையைக் கண்டு இகழா நிற்பர். அவர் இகழவே "உலகத்தோடொட்ட வொழுகல் பலகற்றுங்—கல்லார் அறிவிலாதார்" என்ற

படி அவ்வொழுக்கம் சிறப்பெய்த லின்றும். "பழிப்படுவ செய்யார் நடுவண்மை நாணுபவர்" என்ப.

இனிப்; பண்புடைமைக்கு அன்புடைமையும் ஓர் சார்பாம், "அன்புடைமை ஆன்ற குடிப் பிறத்தல் இவ்விரண்டும் பண்புடை யென்னும் வழக்கு" என்றார் திருவள்ளுவர். இவ்விரண்டும் பண் புடைமைக்குக் காரணக் குறியீடாம். ஆன்ற குடிப்பிறத்தல் இயற்கையானல்லது செயற்கையா னெய்துவ தன்றெனினும் குடிப் பிறந்தார்க்குப் பண்பு இயல்பாய் உண்டென்பது பெறப்படும். ஏனை யோர்க்கோவெனிற் கல்வியும் நல்லோர் தொடர்பு முதலிய செயற் கையால் எய்தற்பால தென்க.

இனிப்; பண்பு ஐம்பொறிகளா னுணரப்படும் குணமெனவும் படும். அது நல்லன கேட்டலும், நறியன மோத்தலும், இனியன வுண்டலும், எற்றன காண்டலும் முதலாயின மேற்கொள்ளுங் குணம். இக் குணமுடையாரும் பெரியராதலிற் பெருமைக்கிஃ துறுப்பாயிற்று. "என்பதத்தா லெய்த லெளிதென்ப யார்மாட்டும்— பண்புடைமை யென்னும் வழக்கு" என்பதனுல் மேலே பெருமித மின்மையாற் பகையின்மையும், பணிவுடைமையான் உலக வசிய மும், எய்தினர்க்கு அவை யுறுதிப்படப் பண்புடைமை யின்றி யமையாது வேண்டப் படுதலின் இப் பண்புடைமை மேற் பணி வுடைமைக்குப் பின் வைக்கப்பட்டது.

## சால்புடைமை.

இனிச்; சால்புடைமை "குணநலஞ் சான்றோர் நலனே" என் பது. சால்பை ஈண்டு ஆசிரியர் அதனையுடையார் மேலாக்கி யுணர்த் தினர். உணர்த்தவே சால்புடைமை தகுதி யெனப்படுங் குணநல மாயிற்று. குணநல மென்றதனுற் சத்துவகுண காரியமும் பெறப் பட்டது. ஏனையிரண்டுங் குணக்கே டெனப்படுதலி னென்க. சால்பு குணங்களா னிறைதல், ஒழுக்கமுமாம். நிறைய வேண்டுவது யாது அது குணமென்றதாயிற்று. ஏனையிரண்டு குணங்களும் நிறை தற்கு யாது பெயரோவெனின் அவை வேண்டப்படா வாகலின் நிறைவின்பாற் படாவென வொழிக. சால்பிற்குக் காரணக் குறியீடு

பொறையுடைமை முதலியன. திருக்குறளில் "குணங்களா னிறைந்து யாவர்மாட்டும் எளிய செவ்வியராதல் அரிய பண்புடையார் செயல்" எனச் சால்பையும் பண்பொடு சேர்த்துப் பரிமேலழகர் உரை விரித்துக் காரியத்தைக் காரணத்தோடு சேர்த்துக் கூறியவாறு முணர்க, மேற் பண்புடைமையைச் செய்கையில் வைத்துக் காட்டுதலும் வேண்டலிற் சால்புடைமை பண்புடைமையின் பின் வைக்கப் பட்டது. எண்ணப்பட்ட உலகியற்செயல் அருளியற்செயல் என்னும் இரண்டில் இத்துணையும் உலகியற் செயற்பெருமைக் கிலக்கணங் கூறியவாறும். அது கல்வியும் தகுதிபற்றிய வறிவும், நன்னடையும், கைம்மாறு வேண்டாக் கடப்பாடும், ஒழிபாகிய தீநெறி விலக்கலுமாம்.

இனிச்; செல்வர் "மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்து—கீழல்லார் கீழல்லவர்" என்பதனான் அவர் உயர்ந்த வமளி முதலியவற்றின் மிசையிருந்தா ராயினும் செல்வம் கல்வி முதலாக வெண்ணப்பட்ட பண்புகள் போலாது நிலையாவியல்பிற் றாகலானும், சின்னாள் அது நிலையுமேனும் அதனாற் பெருமித முண்டாவ தியல்பாகலானும், அஃதுண்டாகி ஈகை பிறவா தாகலானும், "இட்டார் பெரியோ ரிடாதா ரிழிகுலத்தோ" ரெனவவரை பொதுக்குப வாகலானும் ஈண்டு வேண்டப்படாதாம்.

இனி; அருளியற்செயற் பெருமை இயம நியம முதலியன, இது செயற்கரிய செயல், இவ் விரண்டு திறனும் இல்லறந் துறவற மென்னும் இரண்டினு மமையும், இனிச்;

## செயற்கருமை

இனிச்; செயற்கருமை "செயற்கரிய செய்வார் பெரியர்" என்பதனாற் செய்தற்கரிய செயல்களைச் செய்து அதனாற் பெருமை யெய்துதல் என்றவாறாயிற்று. "பெருமை செயற்கரிய செய்தல், தருக்கின்மை, பிறர் குற்றங் கூறாமை முதலிய நற்குணங்களுடைய தன்மை" எனப் பெருமைக்குப் பொருள்கூறு முகத்தாற் பாகுபாடு கருதுப வாகலிற் செயற்கருமை பெருமைக்கு உறுப்பாயிற்று.

இனி; அருளியற்செயல் சரிலையிற் சரிதலும், கிரியையிற் றளர்தலும் யோகத் துணங்கலும், ஒண்பொரு டுக்கலும் ஆகிய விந் நான்கும், இவை யடங்கிய போக முயற்சியும் தவ் முயற்சியு மென விரண்டுமாக வாறுமாம், ஆக வறுவகையானும் ஆறிறந்த பலவகையானும் வைத்தென்னுவதாம். அருளியற்செயல் முயற்சி முட்டின்றி முடிக்க முயல்வது.

அவற்றுள் போக முயற்சியாவது போகஞ் செய்வார்க்குரிய செயல்களைச் செய்தல். அவை:—இயமம், நியமம், ஆதனம், வளி நிலை, தொகைநிலை, பொறைநிலை, நினைதல் சமாதியென வெட்டாம்.

இயமமாவது:—பொய்யுங் கொலையுங் களவுங் காமமும், பொருள் வேட்கையும் என்றிவ் வைந்தினையு மடக்கல். "பொய் கொலை களவே காமம் பொருணசை—யிவ்வகை யைந்து மடக்கிய தியமம்" என்ப.

இனி நியமமாவது:—பெற்றதற் குவத்தலும், வேறுபா டொழித்தலும், கற்பன கற்றலுந், தூய்மையும், ஆசாற்குப் பூசனை யளித்தலும் என்றிவ் வைந்தாம். "பெற்றதற் குவத்தல் பிழம்பு நனி யுலர்த்தல்—கற்பன கற்றல் கழிகடுந் தூய்மை—பூசனைப் பெரும் பய மாசாற் களித்தலொடு—நயனுடை மரபி னியம மைந்தே" என்ப.

ஆசனமாவது:—நிற்றலு, மிருத்தலுங், கிடத்தலு, நடத்தலு மென்றிந் நான்காம். "நிற்ற லிருத்தல் கிடத்தல் நடத்தலென்—றொருத்த நான்கி னெல்கா நிலைமையோ—டின்பம் பயக்குஞ் சமய முதலிய—வந்தமில் சிறப்பி னாசன மாகும்" என்ப.

வளி நிலையாவது:—உந்தியிற் புணர்ந்த விருவகை வாயுவின் இயக்கத்தைத் தடுத்தல். "உந்தியொடு புணர்ந்த விருவகை வளி யுந்—தத்தமியக்கந் தடுப்பது வளிநிலை" என்ப.

தொகை நிலையாவது:—புலன் பொறிவழி போகாது ஒரு வழிப் படுத்தல். "பொறியுணர் வெல்லாம் புலத்தின் வழாம—லொரு வழிப் படுப்பது தொகைநிலைப் புறனே" என்ப.

இனிப்; பெருமிதமின்மை, பணிவுடைமை, பண்புடைமை சால்புடைமை, செயற்கருமை, என்னும் திறனைந்தில் முன்னை நான்கும் உலகியற் பெருமையும், ஐந்தாவது அருளியற் பெருமையு மாகி, அவைதாம் கல்வியிற் பெரியார், அறிவிற் பெரியார், நடையிற் பெரியார், கொடையிற் பெரியார், ஆற்றலிற் பெரியார் எனவும், உருவின்வழிபடுமடிகள், உருவருவின் வழிபடுமடிகள், அருவின் வழிபடுமடிகள், துறந்தோர், துவரத் துறந்த தூயர் எனவும் முறையே உலகியல் அருளியற் பெரியார்களில் வைத்து இயக்குமாறு சிறப்பியலினும், சமயப் பெரியார், போலிப் பெரியார் முதலாக வேறுள்ள பலரையும் ஒழிபியலினும், அன்னோரை வழிபடுதலும், வழிபடாமையும், வழிபடுதலான் எய்தும் பயனும் பயனியலினும் வைத்து உணர்த்துமாறு காண்க.

---

# இவையாவும் மாதவியே

[திரு. ப. அ. முத்துத்தாண்டவராயப் பிள்ளையவர்கள்]

**பேரகராதி:—**

மாதவி-ஓர் கொடி, குருக்கத்தி, வசந்தகால மல்லிகை, துளசி.

குருக்கத்தி-ஓர் மரம்.

**சதுரகராதி:—**

மாதவி-குருக்கத்தி மரம், வசந்தகால மல்லிகை.

பிங்கலந்தை உ௭0௬, திவாகரம் ச, ௫௬, சூடாமணி ச, ௫.

குருக்கத்தி—மாதவி.

**அமரகோசம்:—**

மாதவிலதா—குருக்கத்தி.

**Winslow:—**

மாதவி-குருக்கத்தி Gaertmara racemosa.

மாதவி-வனமல்லிகை a large creeper Gaertmara racemosa..

வநமல்லிகை–Wild gasmine
குருக்கத்தி–a kind of tree Gaertmara racemosa.
Tamilian Friend:—

Natural order–Combre traceae.

மாதவிக்கொடி–Combretum valifolium.

Apte.:—

மாதவி–Spring creeper; Sacred Basil.

இறையனாரகப்பொருள்:—

மாதவி வல்லி மண்டபத்தே.

பெரிய திருமொழி, ரு–௩–உ.

உயர்கொண் மாதவி–ஆகாயத்தில் ஓங்கி வளராநின்ற குருக்கத்தி மரம், ஆகாசாவகாச மிட மடையும்படி வளர்ந்த குருக்கத்தி.

திருஞானசம்பந்தர்:—

மாதவிமேய வண்டிசைபாட மயிலாட (க, குறிஞ்சி. புறவம், உ)
கொடிவிடுமாதவி (௩, கௌசிகம், ஆரூர், ரு.)
செருந்தி பூ மாதவிப் பந்தல் (௩, கொல்லி, தென்குடி, ரு.)

சங்கநூல்களின் உரையகத்து.—

நச்–மாதவி–குருக்கத்தி (சிந்தா, ரு, கடுள)

அடியார்க்–மாதவி–குருக்கத்தி (சிலப், ரு, கசுo.)
மாதவி (லதா)–வாசந்தி (சாகுந்தலம் ௩, கo; மேகதூதம் எஅ, ச.)
கம்பர்– சுந். உருக். 21.

மாதவிப் பொதும்பர்–குருக்கத்தி மரச்செறிவு.
குருக்கத்திக்கோடி (உ–வே–சா)

---



வெட்சித் திணை

# வெட்சித் திணை

[இளவழகனார்]

கொடுவரி கூடிக் குழூஉக்கொண் டனைத்தால்
நெடுவரை நீள்வேய் நரலும்—நடுவூர்க்
கணநிரை கைக்கொண்டு கையகலார் நின்ற
நிணநிரை வேலார் நிரை.

(புறப்பொருள் வெண்பாமாலை, ௧ : ௬)

'உயர்ந்த மலைகளில் வளர்ந்துள்ள நீண்ட மூங்கில்கள் ஒலிக்கும் சீறூரின் நடுவில் திரண்ட பசுக்களைக் களவிலே கைப்பற்றிக் கொண்டு அவ்விடத்தை விட்டு நீங்காராய்க் கொழுப்புக் கறை, ஏறிய வேற்படையை யுடைய வீரர்கள் நின்ற நிலை, புலிகள் தம்மில் ஒன்று கூடித் திரட்சி கொண்ட தன்மையை யொத்திருந்தது.'

கொடுவரி - 'வளைவான வரிகளை யுடையது' என்னும் பொருளினால் ஆகுபெயராய்ப் புலியை யுணர்த்தும். ஆல் - அசை. நடுஊர்-ஊர் நடு. கணநிரை, நிரை-பசு; இதனைக்

"கோவே பெற்றம் நிரைகுடம் சுட்டுத்
தேனுசுரை பத்திரை கபிலை சேதா
ஆவே சுரபி ஆன்பசு வாகும்." *

என்னும் பிங்கலந்தையிற் கண்டுகொள்க. கையகலல், ஒரு சொல்; இஃதிங்கு 'இருந்த இடத்தை விட்டு நீங்குதல்' என்னும் பொருளில் வந்தது. 'நிண நிரை வேல்' என்றது 'முழுதும் நிணக்கறை வாய்ந்த வேல்' என்றற்கு. இங்கு 'நிரை' யென்றது 'வேன் முழுமையும்' என்பதைக் குறிக்கும். திரண்ட பசுக் கூட்டங்களே புலிகளின் திரட்சிக்கு உவமையாகு மெனினும், இங்குப் போரிடுதற்கும் பின் வாங்காது முனைத்து நிற்கும் வீரர்களின் போர் முனைப்புப் புலியின் தன்மைக்கு ஒத்தலால், போர் வீரரின் குழுவுக்கே இங்குப் புலித்திரள் உவமையாயிற்று. இஃது அரசன் கட்டளைப்படி பகைவரூர் சென்று அவர்தம் பசுக் கூட்டங்களைக்

* பிங்க, அ: ௧௭௭.

கவர்ந்துகொண்டு ஆங்கே ஆண்மையுடன் உள் கலங்காது நிற்கும் போர் மறவரின் நின்ற நிலை கூறிற்று. இங்ஙனம் இம் மறவரே "கூற்றினத்தன்னர்"* என்று மேலுஞ் சிறப்பிக்கப்படுதல் காண்க.

உயிர்கட்கு அகத்தே எழூஉம் எல்லா எண்ணங்களும் புறப் பொருள்களின் தொடர்பாகவே காணப்படுகின்றன. அவற்றுட் சில அப் புறப்பொருள்களை நேரே பற்றிய எண்ணங்களாகவும், மற்றுஞ் சில அந்நேரெண்ணங்களின் விளைவான வேறெண்ணங்க ளாகவுந் தோன்றுகின்றன. கவர்ச்சி மிக்க ஒ ரருமையான பெண் ணுடம்பினைக் கண்டதும் அவ்வுடம்பின் அழகைப்பற்றிய எண் ணம் நேரே உண்டாகின்றது. பின்னர் அவ்வழகைப்பற்றிய என் ணத்தின் விளைவாக அன்பென்னும் வேறெண்ணம் விளைகின்றது. அழகை யுணரும் எண்ணத்தினும் அன்பை யுணரும் எண்ணம் நுட்பம் வாய்ந்தது. எனினும் அவ்வன்பெண்ணமும் உடம்பென் னும் புறப்பொருளின் தொடர்பினு லெழுந்த தென்பது மறுத்தற் கியலாததாகும்.

தண்டமிழ்த் தொல்லாசிரியன்மார் உயிர்க்கு வேருகக் கொள் ளப்படும் எல்லாப் பொருள்களையும் புறப்பொருளென்றே உணர்ந் தனராதலின், உயிர்கட்கு விளையும் எல்லா எண்ணங்களும் புறப் பொருள்களின் தொடர்புடையனவேயா மென்பது நன்கு விளங் கும். புறப்பொருள்களைப்பற்றி இவ்வாறு எழூஉம் நினைவுகளில் நேரே விளையும் எண்ணங்களை யெல்லாம் புறப்பொருளிலக்கணத் திலும்,அவ்வெண்ணங்களின் விளைவான வேறு நுட்பஉணர்ச்சிகளை யெல்லாம் அகப்பொரு ளிலக்கணத்திலும் ஆசிரியன்மார் பகுத் தடக்கி உரைகிளந்தனர். உயிரியல்பினும் புறப்பொரு ளியல்பு வல்லிதா யிருத்தலால், அப்பொருளின் தொடர்பான நினைவுகளும் வல்லிய இயல்பு வாய்ந்தனவாய்த் தோன்றும். அறிவுள்ள உயிரி னியல்பு மெல்லிதாயிருத்தலால், அவ் வகப்பொருளின் தொடர் பான நினைவுகளும் மெல்லிய இயல்பு வாய்ந்தனவாய் விளங்கும். எனவே பொருள் தேடும் வேட்கையான் புறப்பொருள்கள்பாற்

---

* புறப்-வெ. க: ௫.

செறிவு நிகழ்ந்து வல்லிய நினைவுகள் விளைதலின், அவ்வல்லிய நினைவுகட்கும் அவற்றின் வழியவான சொற்செயல்களுக்கும் முதன்மைபவான போர் நினைவுகளையும் அவற்றைப் பற்றிய சொற் செயல்களையும் புறப்பொரு ளிலக்கணத்தில் எடுத்து விரித்துரை கிளப்பது பொருளாசிரியன்மார் மரபு. அவைதம்மிற் புறத்தே காணப்படும் பொருள்கள் பலவற்றின் நுண்ணிய லாராய்ச்சியும் விரிக்கப்படும். ஆதலால், இங்குப் புறப்பொருளிலக்கண வாராய்ச் சிக்கு எடுத்துக் கொள்ளப்படுங் கருத்துப் பெரும்பான்மையும் போர் முறைகளேயாம். இனி அவற்றை யொட்டி இயல் பொருள் களின் நுட்பவாராய்ச்சியும் அவைதாம் அகப்பொரு ளிலக்கணத் தூக்கு ஒத்து உதவியாய் நிற்குமாறும், அவற்றைப்பற்றிப் பழைய பொருளாசிரியன்மார் பெரிதாராய்ந்துரைக்குங் கருத்து நுட்பங் களும் இக் கட்டுரைகளில் மலைவு நிகழாவண்ணம் மிகத் தெளி வாய் எடுத்து விளக்கப்படும். போர் நிகழ்ச்சிகட்கு உரியார் பொருட்பேறு வல்ல அரசியன் மக்களாதலால், அவரே இப் புறப் பொருளிலக்கணத்துக்குக் காட்டாகக் கொள்ளற்பாலர்.

அரசர்தம்முள், நிலங் கவரல் வேண்டுமென்னும் மண்வேட்கை யால் இகல் விளையும். இகல் விளையவே அவர்தமக்குட் போருண் டாகும். மண்வேட்கை மிக்க அரசனே முதலிற் போர் துவங்கு வான். துவங்குகின்றவன், வேற்றரசன் உள்ள அயல் நாடு சென்று பொரல்வேண்டு மாதலின், முதலில் அவன் அவ் வயல்நாட்டகத்து வாழும் அறவோர் பெண்டிர் ஆன் முதலியோரை அந்நாட்டினின் றும் அப்புறப்படுத்துவான். ஏனென்றால், அவரெல்லாரும் பொருள் நெறியின் நோக்கமின்றி அறநெறி வாழும் அருநிலைபராதலால், அவர்க்குத் தீங்கு செய்தலாகாதென்பது அரசன் கருத்து. பகை யும் போரும் மிக்கு ஒரு நாட்டகத்து வீரக் குடிமக்கள் அரச னொடு மயங்கி ஆண்மையொடு பொருது ஆங்குக் காணும் எல்லாத் துன்பங்களையும் ஏற்றுநிற்ப ராதலால் அந்நாட்டின்கண் அறவோ ராய் வாழ்வாரும் அங்ஙனம் அத்துன்பத்தை ஏற்று நிற்றல் ஆகாதாமென்று பண்டைத்தமிழர் கருதி அவரை அப்புறப் படுத்துவாராயினர். பழமை தொட்டே இவ்வழக்கம் நம் தமி ழகத்தில் உண்மை

"ஆவும் ஆனியற் பார்ப்பன மக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
எம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மினென
வறத்தாறு நுவலும் பூட்கை மறத்தின்" *

என்னும் புறநானூற்றுப் பழம் பாட்டினால் நன்கு விளங்கும். ஆசிரியர் நச்சினார்க்கினியரும் 'இருபெரு வேந்தர் பொருவது கருதியக்கால் ஒருவர் ஒருவர் நாட்டு வாழும் அந்தணரும் ஆவும் முதலியன தீங்கு செய்யத்தகாத சாதிகளை ஆண்டு நின்றும் அகற்றல் வேண்டிப் போதருகவெனப் புகறல்' † என்று தொல்காப்பியப் புறத்திணையியலில் உரை கூறினர்.

அரசன் இவ்வாறு அறவோர் முதலியோரை அப்புறப்படுத்தும் பொழுது அவர்தாம் வேறிடம் தமக்கு அரண்காணாராயின், அவரைப் போர்மேல் விழைந்த அரசன் தன் நாட்டகத்து வருவித்து நாளும் பாதுகாத்து வருவான். அங்ஙனம் வருவித்தலில் தாமே உணர்ந்து வருதற்கேற்ற அறிவில்லாத ஆன் கூட்டங்களை அரசன் தானே தன் போர்மறவரை ஏவிக் கைப்பற்றிக் கொணர்வான். அரசன் ஏவுதலின்றியே அவன் கருத்தறிந்து போர்மறவர் தாமே சென்று வேற்றரசரின் அயல் நாட்டகத்து ஆன் நிரையைக் கைக் கொண்டு மீளலும் உண்டு. அரசன் ஏவல் பெற்றுச் செய்தல் 'மன்னுறு தொழி'லென்றும், அவன் ஏவல்பெறாமற் போர்மறவர் தாமே யுணர்ந்து செய்தல் 'தன்னுறு தொழி'லென்றும் புறப்பொருள் வெண்பாமாலை,

"வென்றி வேந்தன் பணிப்பவும் பணிப்பின்றியும்
சென்றுஇ கல்முனை ஆதந் தன்று" ‡

என்னுங் கொளுவினால் ‡ விளக்கங் கூறும். இத்தன்னுறு தொழிலென்னுஞ் செய்தியினால், வீரர்குழுவினர் அரசனது நோக்கத்தி

* புறநானூறு, ௯. † தொல், புறத், ௨.
‡ புறப்-வெ. ௧; ‡ கொளு-கருத்துரைக்கும் நூற்பா.

னளவினராய் நின்று அவன் கருத்து யாது என்று ஆராய்தலிலேயே தமது நினைவை முழுதும் நிறுத்தி அதன்கண் 'அவ்வரசனினும் தாமே மிக்க தீவிரமுடையராய்ப் பண்டு நிகழ்ந்தன' ரென்பது இனிது விளங்கும். பண்டைத்தமிழரசரின் வீரக்குடியினர் தமது கடமையை எவ்வாறு ஆற்றினர்களென்பதற்கு இஃதொரு சிறந்த சான்றாகும்.

"வெங்குருதி மல்க விழுப்புண் ணுகுதொறூஉ
மிங்குலிகஞ் சோரும் வரையேய்க்கும்—பைங்கண்
இனம்போக்கி நின்றார் இகல்வாட்டி வேந்தன்
மனம்போல வந்த மகன்.*

என்று புறப்பொருள் வெண்பாமாலையிலேயே மேற் கரந்தைப்படலத்தில் பண்டைத் தமிழ்வீரன் 'வேந்தன் மனம் போல வந்த மகன்' என்று சிறப்பிக்கப்பட்டிருத்தல் காண்க. 'யான்கண்டனையர் என் இளையர்' † என்று புறச்செய்யுளிற் கூறியிருத்தலும் உற்றுநோக்கற் பாலது.

இத்துணை நுட்பமாய் அரசன் கருத்தினை முன்னறிந்து தொழில் செய்வாரான போர்வீரர் இனிப் பகையரசர் நாடு சென்று ஆன் நிரை கவர்வர். பகைப்புலத்து ஆன் நிரை கொள்ளும் இவ் வாண்மையறச்செய லொழுக்கமே 'வெட்சித்திணை'யென்னுஞ் சொல் லாற் புறப்பொருளிலக்கண நூல்களிற் கூறப்படுவதாகும். இவ் வெட்சித்திணைக் கருத்துக்களை முன்பின் னாசிரியன்மார் தத்தம நூல்களுக்கேற்பக் கைக்கொண்டு விளக்கிய அரிய நுண் முறை களும், இப்புறத்திணைப்பொருள் தனக்கு அகமாய் விளங்கும் அகத் திணைக் கருத்தொடு நுணுகிப் பொருந்தி மாறின்றி நிற்கும் உண் மைகளும் அடுத்த 'கரந்தைத்திணை'க் கட்டுரையில் விளக்கிக் கூறப் படும்.

வெட்சித் திணையின்பாற் படும் வீரர்தம் ஆகோட்செயல் தொல்காப்பியப் புறத்திணையியலில்,

"படையியங்கு அரவம்; பாக்கத்து விரிச்சி;
புடைகெடப் போகிய செலவே; புடைகெட

---

* புறப் - வெ, 2; 6　† புறம், 11௧

வொற்றி ஞகிய வேயே; வேய்ப்புறம்
முற்றி ஞ்கிய புறத்திறை; முற்றிய
ஊர்கொலே; ஆகோள்; பூசன்மாற்றே;
நோயின்று உய்த்தல்; நுவலுழித் தோற்றம்;
தந்துநிறை; பாதீடு; உண்டாட்டுக்; கொடையென
வந்த ஈரேழ் வகையிற் ருகும்''*

என்று பதினுன்கு பிரிவுகளாகப் பகுத்துக் கூறப்படும். இப்பிரிவு களேயே துறைகளென்றுங் கூறுப. இப்பதினுன்கு துறைகளேயும் புறப்பொருள் வெண்பா மாலேயும் முறையே எடுத்துக்கூறிப் புலனறி சிறப்பு, பிள்ளே வழக்கு, துடிநிலே, கொற்றவை நிலே, வெறியாட்டு என மேலுஞ் சில கூட்டிக் கூறும். இவைதம்மை ஆசிரியர் தொல் காப்பியனுர் ஒன்றினென் றடக்கிப் புறனடையாற் கூறுவர்.

இனி மேற்காட்டிய பதினுன்கு துறைகளுள்ளும் 'படையி யங்கு அரவம்' என்பது ஆன் நிரை கொள்ளுதற்காகப் பகைப்புலத் துக்குச்செல்ல விரும்பிய போர்மறவ ரெல்லாரும் சாயுங் காலத்தில் தமது ஊர்க்குப் புறம்பாக வந்து ஒன்று கூடி வெட்சிப்பூவை மயிர் முடியிற் சூடித் தமக்கு வழிபடு தெய்வமாயுள்ள கொற்றவை யென் னுந் தேவதையைத் துடிகொட்டி வணங்கிப் புறப்படும்போது ஆங் குண்டாகும் ஓசையாகும். வீரர்கள் ஒன்றுகூடும் போதும், வெட்சிப் பூவைச் சூடும் போதும், துடிகொட்டும் போதும், புறப்படும் போ தும் உண்டாகும் படையியங்கு அரவமே இங்குக் குறிப்பிடப்படுவ தாமென்க. என்னே? ஒரு திரண்ட மறவர்படை ஓரிடத்தினின்றுந் தொலேவான வேருேரிடத்திற்கு எழுந்து புறப்படுவதென்ருல், ஆங்கு ஓசைப்பெருக்கம் உண்டாகா திரா தாதலினென்பது. இங்குக் கூறப்பட்டது மறவர் படையின் இயங்கொலி மயக்கமே யாயினும், அஃது அப் படை வீரரின் புறப்பாட்டெழுச்சியினேயே குறிக்கு மென்க. அதுவே அத் துறைக்கருத்துமாம். போர்மறவர்கள் நிரை கோடற்குப் புறப்படும் பொழுது கொற்றவையைத் துணைகொள் ளும் இயைபு, 'மாற்ருர்க்கு உட்குதலேக் கொடுக்கும் சீருரிடத்துத் தனக்கிணேயில்லாத வீரன் நிரை கொள்ளத் நிலேப்பட்ட விடத்து,

---

* தொல், புறத், ௩

அவர்க்குப் போர்ப்பூவாகிய வெட்சிமலரைச் சூட்டுதற்கு வெள்ளிய வாளுழத்தியும் (கொற்றவையும்) வேண்டும்; அங்ஙனம் அவளும் உடன்செல்லக் கருதியவழி"³ என்று ஆசிரியர் அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார வேட்டுவவரிக்கண் உரைகூறு முறையாற் பெறப்படு கின்றமையின், இங்குத்'துடிகொட்டுத'லென்று கூறப்படுவது கொற் றவையை வணங்கும் போது பயன்படுத்தப்படும் பறைக்கருவி யாகிய உடுக்கையை அடித்தொலித்தலேயா மென்பது தெளி பொருள். குறிஞ்சிப்பறையென்று நூல்களிற் சுட்டிக் கூறப்படுவது இதனின் வேறென்று அறிந்துகொள்ளல் வேண்டும்.

இவ்வாறு இப் போர் மறவர் இங்குப் படையியங்கிப் புறப்படும் அந்த நேரத்திலேயே, இவர்கள் மேற் செல்லுதற்குக் கருதியிருக் கும் பகைவர்தம் நாட்டகத்தில் ஆன் நிரைகள் தங்கியிருக்கும் மலைக்காட்டின்கண், வருவது குறித்துத் தீக்குறியாகக் 'காரி'யென் னும் ஒரு பறவை அழாநிற்கு மென்பது இங்குக் குறித்தற்குரியது. இக்காரிப்பறவையின் ஓசையையும் மேற் கூறிய படையியங்கரவத் தோடு சேர்த்து 'வெட்சியரவ' மென்று கூறுமரபு தொல்காப்பியப் புறத்திணையியல் நீங்கலாக ஏனைச் சங்கநூலுரைகளிலெல்லாங் காணப்படுகின்றது.

"உட்குடைச் சீறூ ரொருமகனு னிரைகொள்ள வுற்ற காலை
வெட்சி மலர்புனைய வெள்வா ளுழத்தியும் வேண்டும் போலும்
வெட்சி மலர்புனைய வெள்வா ளுழத்தியும் வேண்டின் வேற்றூர்க்
கட்சியுட் காரி கடிய குரலிசைத்துக் காட்டும் போலும்"*

என்பது சிலப்பதிகாரப்பாட்டு. ஆயினும் நிமித்தம் பார்த்தலையே கருப்பொருளாகக் கொண்டு மேல் வரும் 'விரிச்சி'யென்னுந் துறை யினை ஆசிரியர் தொல்காப்பியனார் தமது புறத்திணையியலில் எடுத் துக் கூறுதலின், 'வேற்றூர்க் கட்சியுட் காரி கடிய குரலிசைத்துக் காட்டு' மென்னும் நிமித்தம் பற்றிய கோட்பாட்டுரை அவர்க்கு மாறுவதன்றென் றறிந்துகொள்க. 'காரி'யென்பது கரிக்குருவி. இப் பறவையின் அழுகுரலை அங்கு ஆன் நிரைகளைக் காவல் செய்து

* சிலப், கஉ;'உட்குடைச்'

நிற்கும் கோவலர் நீக்குறியாகக் கருதித் தம்முள் ஒருவருக்கொரு வர் அறிவித்துக்கொண்டு மிகவும் விழிப்பாய்த் தமது காவலில் முனைந்து நிற்பார். இவர் செய்கை

"கானிடை யினநிரை காவல் போற்றுமின்
ஆனிடை யழித்தபுள் ளென்று கூறினர்."*

என்று சீவகசிந்தாமணியின் கனகமாலையா ரிலம்பகத்திற் கூறப் படுகின்றமை காண்க. ஆகொள்ளும் நோக்கமுடையாரும் ஆகாக் கும் நோக்க முடையாருமாக இங்ஙனம் இருவேறாரின்கண் போர் வலருங் கோவலரும் வெட்சியரவ முணர்ந்து எழுச்சியுடையராய் நிற்குமளவே 'படையியங்கரவம்' அல்லது 'வெட்சியரவம்' என்னுந் துறையாம்.

இனிப் 'பாக்கத்து விரிச்சி' யென்பது, வேற்றுப் புலஞ் சென்று ஆநிரைகோடும் முனைப்புடையராய்ப் படையியங்கிப் புறப் பட்ட போர் மறவர் சிறிது தொலைவு சென்று ஒரு விடுதியில அமர்ந்து தாம் மேற்கொண்ட செயல் இனிது முடிந்து அதன் முகத்தால் தம் அரசனுக்கு ஆக்கம் † விளையுமாவென்று அறிதற் காக நற்சொற் கேட்டலிற் காது கொடுத்து நிற்றலாம். 'விரிச்சி' யென்பது நற்சொல். பாக்கமென்பது ஊர். சிறிது தொலைவு சென்று ஓர் ஊர் மருங்கு நின்று நற்சொற் கேட்டலென்க. நற் சொல் என்பது இவர்தாம் மேற்கொண்ட முதல் நோக்கத்தோடு ஒத்த கருத்துடைய வெற்றி காணுஞ் சொல். இந் நற்சொல்லா வது இவ்வகையான தென்பதும், அதுதன்னைக் கேட்டுத் தம தெண்ணந் துணியுமாறு இம்முறையான தென்பதும் விளங்க வைத்தற் குரியதொரு பகுதி பத்துப் பாட்டினுள் ஒன்றான முல்லைப்பாட்டின்கண் வருகின்றது. அது,

"விரிச்சி நிற்பச்
சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்
உறுதுயர் அலமரல் நோக்கி ஆய்மகள்
நடுங்குசுவல் அசைத்த கையள் கைய

* சீவக, எ: உகூ

† நன்மை, இலாபம்முதலியன.

கொடுங்கோல் கோவலர் பின்நின்று உய்த்தர
இன்னே வருகுவர் தாயர் என்போர்
நன்னர் நன்மொழி கேட்டனம் அதனல்
நல்ல நல்லோர் வாய்ப்புள் தெவ்வர்
முனைகவர்ந்து கொண்ட திறையர் வினைமுடித்து
வருதல் தலைவர் வாய்வது."*

என்பது. இதன் கருத்து, 'நற்சொற் கேட்டு நிற்ப, அப்பொழுது அருகே யிருந்த இடையர் குலத்துப் பெண்ணொருத்தி, பால் குடித்தற்காகத் தம் தாயை நினைத்துச் சுழன்று சுழன்று வருந்து கின்ற பசுங் கன்றுகளைப்பார்த்து, ஆயர்கள் பின்னே நின்று செலுத் திவர உங்கள் தாய்மார் இப்பொழுதே வந்து விடுவார் என்று கூறு கின்ற நற்சொல் கேட்டனம்; அதனாற் பகைப்புலஞ் சென்றவர் தாம் மேற்கொண்ட செயலை முடித்துக்கொண்டு உடனே வந்து விடுவ' ரென்பது. இது, மழைகாலம் பிறந்த உடனே வருவே னென்று சொல்லிப் பகை யரசரோடு போர் புரிதற்காகப் பகைப் புலஞ் சென்ற தன் தலைவனை நினைந்து, மழை காலம் பிறந்தும் இன்னும் வந்திலனே என்னும் பிரிவாற்றாமையினாற் பெரிது வருந் திக் கிடக்குந் தலைவிக்கு அவளைச் சூழ்ந்து நிற்பாரான பெண்டிர் சிலர் நற்சொற் கேட்டு வந்து சொன்ன அகப்பொருட் பகுதி யாகும். தாய் நாடி நிற்குங் கன்றுகட்குத் தாயர் வருவார் என்று ஆய்மகள் கூறிய கூற்றுத் தலைவன் வருகையை எதிர் நோக்கிக் கிடக்குந் தலைவியின் நோக்கத்திற்கு முழுதொத் திருத்தலோடு 'வருவார்' என்னும் நற்சொன் முடிபையும் பெற்றிருத்தல் காண்க. இதுவே வெற்றி காணும் நற்சொல்லாம். இனி இந் நற்சொல்லி விருந்து தமது நெஞ்சங் கொண்ட கருத்துக்கும் தலைவன் வருவா னென்று ஒரு முடிபு தேற்றிக் கொண்டார் விரிச்சி கேட்டு நின்ற பெண்டிர். இவ்வாறே ஆகோடற் கெழுந்த படைமறவரும் ஆங் குத் தமது நோக்கத்தோ டொத்து முடிபு தேற்றி வெளிப்பட்ட தொரு நற்சொற் கேட்டுத் தஞ் செயலும் இனிது முடிந்து ஆக்கமா மென்று துணிபெய்தினர். அவர் கேட்ட நற்சொல்லை மறப்பெண்

---

* முல்லைப், கக-உம.

ணொருத்தி அருகே நின்றுளை விளித்து நம்மவர் கூட்டம் வாயிலில் திரண்டிருத்தலால் அங்குள்ள குடத்துக் கள்ளை யெடுத்துக் கொண்டுவா என்று கூறுவதாகப் புறப்பொருள் வெண்பாமாலை கூறும்.* இது புறப்பொருட் பகுதி. படைமறவர் ஆனிரை கவர்ந்து வந்தபின்னர்த் தமது வெற்றிக் களிப்பினாற் கள்ளுண்டு மகிழ்ந்தாடுவ ரெனக் கிளந்து மேல் வரும் 'உண்டாட்டு' என்னுந் துறை விளக்கு தலின், ஆகவர் தற் கெழுந்த அம்மறவர் தமது வெற்றிக்குறிகுறி யான நற்சொல்லென்று அதனைக் கொள்வாராயின ரென்க.

இனி இவ்விரிச்சி கேட்குமாறு: திரண்டு சென்ற வீரர்தம் படையுள் நற்சொற் கேட்டற்கு உரியரான நல்லோர் சிலர் நெல்லு நாழியும் மணமலர் சிலவும் நல்ல நீருங் கைக்கொண்டு ஆங்குக்காணப் படுங் கோயிலொன்றிற்குச் சென்று பூச்சொரிதற்கென்று நிறுத் தப்பட்டிருக்குங் குண்டத்தில் முன்பு நீரைத்தெளித்து அதன் பின் சிறிது நெல்லும் சில மலருமாகக் கலந்தவாறாய் விட்டுவிட்டுச் சிறிது சிறிதாத் தூவிக் கடவுள் வணங்கி நெஞ்சொருமையுடன் செவி நிறுத்தி நற்சொல் கேட்டு வருவர். தமிழ் நாட்டு மாந்தர் பண்டு மேற்கொண்ட இவ்வுண்மை,

"அருங்கடி மூதூர் மருங்கிற் போகி
யாழிசை யினவண் டார்ப்ப நெல்லொடு
நாழி கொண்ட நறுவீ முல்லை
யரும்பவி ழலரி தூஉய்க் கைதொழுது
பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்ப"†

என்னும் முல்லைப்பாட்டினாலும்,

"நெல்நீர் எறிந்து விரிச்சி யோர்க்கும்"‡

என்னும் புறப்பாட்டினாலுந் தெளியப்படும். இங்குக் குறிக்கப்பட்ட கோயில்களுந் தெய்வங்களும் அவ்வந்நிலத்துக் கோயில்களுந் தெய் வங்களுமாகும். குறிஞ்சி நிலமாயின் முருகனையும், முல்லை நிலமாயின் மாயோனையும், மருத நிலமாயின் வேந்தனையும் (இந்திரனையும்) நெய் தல் நிலமாயின் கடற்றெய்வத்தையும் (வருணனையும்), பாலை நிலமா

* புறப்-வெ, க: ச. † முல்லைப், எ-கக. ‡ புறம், உஅ: கூ

யின் ஞாயிற்றினையுங் கொற்றவையையும் வணங்கி விரிச்சிகேட்பர். இவைதம்முட் சில தெய்வங்களுக்குச் சில நிலங்களிற் பண்டு கோயில்கள் காணப்படா. அங்ஙனங் காணப்படாவாயினும் அவ்வந்நிலத்தார் தத்தம் தெய்வத்தை வணங்குதற்குரிய இடமும் முறைகளும் வகுத்துக்கொண்டிருப்பராதலால், அவ்வவ் விடங்களையும் அவ்வம் முறைகளையுமே இங்குக் கொண்டுகொள்ளல் வேண்டும். நெய்தல் நிலம் வாழும் செம்படவர் தமது குடியிருப்புகளுள்ள மணல் முற்றத்திலேயே சுறு மீனின் வல்லிய கொம்பை நட்டு அதனையே தமது கடற்றெய்வம் ஏறியுறையுந் தெய்வக்குறியாக நினைந்து வணங்குவராதலின், தெய்வம் வணங்கி விரிச்சிகேட்க விரும்பும் அந்நிலத்து மக்களும் அது செய்வரென்க. ஞாயிறுங் கொற்றவையும் எல்லா நிலங்கட்கும் பொதுவாதலாலும், அவ்விரண்டனுள்ளுங் கொற்றவையே போர் மறவராற் பெரிது பாராட்டப்படுவதாதலாலும் அவர்தாம் தாமிருப்பது எந்நிலமேயாயினும் பெரும்பாலும் அவ்வந் நிலங்களிலெல்லாம் நிறுத்தப்பட்டிருக்குங் கொற்றவை கோயிலுக்கே சென்று விரிச்சி கேட்பர். தாஞ்சென்ற ஊர்க்கண் கோயிலில்லையானல் ஏதானுமொரு நல்லிடத்தைக் குறித்துக்கொண்டு அதனைத் துப்புரவு செய்து நீர் தெளித்து முன் கூறியவாறே நெல்லும் மலருந் தூஉய்க் கொற்றவையை நினைந்து விரிச்சி கேட்பார். இங்ஙனம் நிகழ்வது பெரும்பாலும் ஒரு மரத்தின் கீழிடமாயிருக்கும். அவ்வாறுனல் அம்மரத்திலிருக்கும் பறவையின் குரல் கண்டும் அவர் தமது நிமித்தந் தேறுவர். மக்கள் நற்சொல்லேயன்றிப் புட்கள் நற்குரல் கண்டும் ஆகவர் தற்கெழும் வேன்மறவர் நன்னிமித்தங் காணுமுண்மையை

"மன்ன வன்னிரை வந்து கண்ணுறு
மின்ன நாளினுற் கோடு நாமெனச்
சொன்ன வாயுளே யொருவன் புட்குரன்
முன்னங் கூறினன் முழுது ணர்வினன்*

என்று **சிந்தாமணி**யின் கோவிந்தையா ரிலம்பகங் கூறிற்று. போர் மறவர்க்கே யன்றித் தமிழ் நாட்டின் ஏனைமக்கட்கும் இங்ஙனம்

---

* சிந்தா, உ: எ.

மரத்தடியிற் சென்று இறைவனை நினைந்து விரிச்சி கேட்கும் வழக்கம் பொதுவென்று கொள்க.

இங்ஙனம் இவ்விரிச்சி கேட்டலை, அரசன் ஏவல் பெறாது தாமே நிரை கொணரற் கெழுந்த மறவர் படையேயன்றி அரசனது ஏவல் பெற்றுச் செல்லும் மறவர் படையும் அரசனது ஆக்கங் கருதி மேற்கொள்வரென்று உரை தேற்றுவார் ஆசிரியர் நச்சினார்க்கினியர். * இனி இவ் விருதிறத்தார்க்கும் ஓரோவொருகால் விரிச்சி கேளாமல் மேற்செல்வதும் நிகழுமென்பதும், அதற்கு ஏது 'வீரம் உண்டு, நாமுண்டு' என்று வீரமே பொருளாக வீரக் குறிப்பின் முனைப்புப் பெற்ற துணிவு மிக்க மறவர் சிலர் விரிச்சி வேண்டாமென்று விலக்கிப்போதலா மென்பதும் அறியற்பாலன. இதனை,

"நாளும் புள்ளுங் கேளா வூக்கமொ
டெங்கோ னேயின னாதலின் யாமத்துச்
செங்கால் வெட்சியுந் தினையுந் தூஉய்
மறிக்குரற் குருதி மன்றுதுக ளவிப்ப
விரிச்சி யோர்த்தல் வேண்டா
வெயிற்புறந் தருதும்யாம் பகைப்புல நிரையே"†

என்று **தகடூர்யாத்திரை**யும் விளங்கக் கூறும். ஆயினும் விரிச்சி வேண்டாமென்று விலக்குதலே விரிச்சி கேட்கும் நினைவை யெழுப்பி அதனைத் திடுமெனவுங் கேட்பிக்குமென்னுங் கருத்துப்பட ஆசிரியர் நச்சினார்க்கினியர் விரிச்சி விலக்குதலை அது கேட்டற்கே ஓர் ஏதுவாகக் கொள்வராதலின், * பெரும்பான்மையும் விரிச்சி கேட்டு மேற்செல்லலே ஆங்கு நிகழுமென்றறிந்துகொள்க.

இனிப் 'புடைகெடப் போகிய செல' வென்பது விரிச்சி கேட்டு நன்னிமித்தந்தேறிய மறவர் தமது அரிய வழியைக் கடந்து மாற்றார் புலத்துக்குச் செல்லுதலாம். இங்குப் 'புடைகெட' வென்பது வழிப் பக்கங்களிலுள்ள பகைவர்களின் சூழ்ச்சிகட்கு அகப்படாமல் அவை கெடும்படி செல்லுதலைக் குறிக்கும். மேல்வருவதும்

* தொல், புறத், ௩. † புறத்திரட்டு-நிரைகோடல்.

அது. இனி, அப்பகைப்புலத்தின் அருகே செல்லும்போது அவர்தம் முள் ஒற்றராதற்குரிய சிலர் முன்னுற் சென்று ஆன் நிரைகள் இருக்குமிடமும், அவ்விடத்தின் பரப்பும், அந்நிரையினைக் காத்து நிற்குங் காவல ரிருப்பும், நிலையுந் தொலைவும் முதலாயினவெல்லாம் தெளிவாய்த் தெரிந்துகொண்டு வந்து தம்மவர்க்கு உரைக்கும் உரைக்கூறுகளெல்லாம் 'படைகெட ஒற்றின் ஆகிய வேய்' என்னுந் துறையுறப்பாகும். 'வேய்' என்பது பிறர் தெரியாதபடி அறிந்து கொண்டுவந்து சொல்லுங் கோட்சொல். இதனை யறிந்துரைப்பார் பகைப்புலத்தேயுள்ள நிரை காவலர்போல உடையுங் குரலும் மாற்றிப் பொருத்திக்கொண்டு, அப் புலத்தின்கண்ணும் இவரைப் போலும் ஒற்றர் பலர் முன்னரே கண்ட வெட்சி யரவத்தால் ஆராய்ந்துகொண் டிருப்பாராதலான் அவரும் அறியாதபடி அத்துணை மாயமாய் அவண்சென்று மேற்கூறிய உண்மைகளையெல்லாம் மிகவுந் திறமாய் அறிந்துகொண்டு வருவர். இவர்க்கு வாய்ந்த இந்தத் திறம் மிகவும் அருமையும், பெருமையும் உடையதாகும். இவர் தமக்குள்ள தன்னல மறுப்பு, கண்ணஞ்சாமை, குறிப்பறியுங் கூர்மை, வினைசெயும் ஆற்றல், அவற்றின் நுட்ப திட்பங்கள் முதலிய உயர்ந்த இயல்புகளெல்லாம் அறிஞராற் பெரிதும் போற்றற் குரியனவாம். ஒற்றராவார் இத்துணைத் தெளிந்த நுண்ணறிவும் திறமும் வாய்ந்தாரா யிருத்தலாலன்றே ஆசிரியர் திருவள்ளுவனார் அவரை அறிவின் நிலையமான அறிவுநூலோடிணைத்து அவ்விரண்டினையும் அரசனது கண்கட்கு நிகராமெனத் தெளித்து,

"ஒற்றும் உரைசான்ற நூலும் இவையிரண்டும்
தெற்றென்க மன்னவன் கண்"*

என்று தமது பொய்யா மொழியை இயற்றி யருளினர்! இனைய அருந்திறன் வாய்ந்த ஒற்றரின் வேய்ச்சொல்லுணர்ந்த படைமறவர் அப்போதே அவர்கட்குப் பரிசுகள் நல்கிச் சிறப்பித்தலும் உண்டு.

அதன் பின்பு அம்மறவர் பகைப்புலத்தின்கண் ஆனிரையிருக்கும் இடத்திற்குப் புறம்பாகச் சென்று அங்கோரிடத்திற் கூட்ட

*திருக்குறள், ஒற்றாடல், ௧.

மாய்த் தங்குவர். தங்கித் தமக்குட் செய்துகொள்ளவேண்டிய முன்னேற்பாடுகளையும் ஒழுங்குகளையுந் திறமாகவுந் திட்டமாகவுஞ் செய்துகொண்டு நிரை காவலர் ஆன் நிரையைச் சூழ்ந்து மிக்க விழிப்போடிருக்கும் இருப்பிடத்தை முற்றும் சுற்றி வளைத்து வீரமும் எழுச்சியும் பொங்கு சினமும் மிக்கு அந் நிரை காவலரை யெல்லாம் வாளும் வேலும் வீசி ஒச்சிக் கொன்று குவிப்பர். எல்லாம் சற்றே நேரத்தில் முடிந்துவிடும். உடனே, தம்மை எதிர்ப்பார் எவருமே அங்கு இலராக, அனைவோரும் அவண் சிதறிய ஆநிரைகளை ஒருசேரத் திரட்டிக்கொண்டு மிக விரைவாய்த் தந் நாட்டுக்குச் செலுத்தி வருவர். இவற்றுள், மறவர், ஒற்றுச் சொல் கேட்டு ஆன்நிரை யிருப்புக்குப் புறம்பாகச் சென்றிறுத்தலையே 'வேய்ப்புறம் முற்றின் ஆகிய புறத்திறை' யென்றும், நிரை காவலரைக் கோறல் செய்தலையே 'முற்றிய ஊர்கொலை' யென்றும், ஆகொண்டு திரும்புதலையே 'ஆகோள்' என்றுந் தொல்காப்பியர் கூறினர்.

நிரை காவலரின் இருப்பு வேந்தன் பட்டினத்துக்குப் புறத்தே யிருக்கும். அக்காவலர்தாம் அவ்விடத்திலேயே உறைவாராதலின், அவ்விருப்பு ஒரு சேரியாய் விளங்கும். இதனைப் 'புறஞ்சேரி' யென்று கூறுவர். இங்ஙனமொன்று 'புறஞ்சேரியிறுத்த காதை' யென்னுந் தலைப்பினுற் சிலப்பதிகாரக் கதையிற் றொடர்புபடுதலும் இங்கு நினைவுகூரற்பாலது.

ஆநிரைகள் காத்து நின்ற காவலரில் வாள் தப்பிச் சிதறி ஓடிப் போயினர் சிலர் வேந்தன் பட்டினஞ் சென்று அப்பட்டினத்தார்க்கும் அரசர்க்கும் அறிவிப்பராதலின், அவரும் ஒரு படை திரட்டிக்கொண்டு விரைந்து சென்று ஆகொண்டு செல்வாரை வழியிற் கண்டு எதிர் மறித்துப் போர் தொடுப்பர். தொடுத்தும் என்? ஆதிரட்டிச் சென்றார் அது கண்டு மீண்டும் அவர்மேற் போர் திருப்பிப் பொருது வெல்வர். இங்ஙனம் பின்வந்தார்மேற் போர் மாற்றிப் பொருதலே 'பூசன்மாற்று' என்னுந் துறையாகும். இவ்வாறு சிலர் போர்மாற்றிப் பொரும் போழ்தே ஏனைச் சிலர் தாங் கொண்ட ஆன் நிரைகளை வழியிடையே நிழலினும் நீரினும் படி

வித்து அவற்றிற்கு வருத்தமில்லாமற் செலுத்திக்கொண்டு தமது ஊர்க்கே காற்றினுங் கடுகி வந்து விடுவர். ஆன் நிரையை இவர் வருத்தமில்லாமல் இன்புறுத்திக் கொணருந் துறையே 'நோய் இன்று உய்த்தல்' என்பதாகும். இத்துறை 'சுரத்துய்த்தல்' என்னும் பெயரினாற் புறப்பொருள் வெண்பா மாலையிற் காணப்படும். அரிய காட்டு வழியில் அன்பாய்ச் செலுத்தி வருதலென்பது அதன் கருத்து. இடைவழியிற் பொருதுகொண்டிருந்த மறவரும் திரும்பத் திரும்பப் பின்வந்து போர்தொடுத்தாரையெல்லாம் பொருது பொருது வெற்றியுடையாராவே தமதூர்க்கு வந்து விடுவர்.

இனி இம்மறவர்தாம் தமதூர்க்கண் பகைவர் ஆநிரையோடு வந்து தோன்றுதல் 'நுவலுழித்தோற்ற' மென்றும், தாங் கொணர்ந்த நிரையினைத் தம்மவர் மாட்டுத் தந்து ஊர்ப்புறத்தே நிறுத்துதல் 'தந்து நிறை' யென்றும், பின்னர் விரிச்சி கேட்டுரைத்தாரும், ஒற்றறிந்துரைத்தாரும், பொருது ஆதிரட்டினருமாக அவ் வானிரைகளை வேந்தனேவலாற் பகுத்துக்கொள்ளுதல் 'பாதீடு' என்றும், படை மறவர் ஆதிரட்டித் தாம்பெற்ற மகிழ்ச்சியினாற் கள்ளுண்டு களித்தாடுதல் 'உண்டாட்டு' என்றும், தாந்தாம் பகுத்துக்கொண்ட ஆநிரைகளை இரவலர்க்கு வரையாது கொடுத்து மகிழ்தல் 'கொடை' யென்றுந் துறைகள் கூறப்படுகின்றன. 'நுவலுழித்தோற்ற' மென்பது 'இப்பொழுது வருவ' ரென்று மறவர் குடிப்பெண்டிர் கூறுகின்ற நேரத்தில் ஆங்குத் தோன்றுதல்.

மேற்காட்டிய இப்பதினான்கு கருத்துக்களும் வெட்சித் திணைக்காக ஆசிரியர் தொல்காப்பியனார் பகுத்துக் கொண்ட துறைப்பொருள்களாம். இனிப் புறப்பொருள் வெண்பாமாலையாசிரியர் மேலுங் கூறிய துறைகளைந்தும் பின் வருமாறு: அவற்றுள், ஆநிரை கொள்ளுதற்காக மறவர் படை பகைப்புலஞ் சென்றபோது அஞ்சா நெஞ்சினராய் நிரைகாவல ரூர்சென்று ஒற்றறிந்து வந்த ஒற்றர் திறம் ஏனைபோர் திறத்தினுஞ் சிறந்ததாதலின், அவர்க்கு மற்றைபோர் நிரை பகுத்துக்கொண்ட பங்கைக் காட்டிலும் அவர் பங்குக்கு இரண்டொரு பசு மிகுதியாக ஏற்றிக்

கொடுத்தல் முறையாகுமென்பது 'புலனறி சிறப்பு' என்னுந் துறையாம். 'புலனறி சிறப்'பென்பது புலனறிந்து வந்து சொன்னமைக்காகச் செய்யுஞ் சிறப்பாம். புலனறிதலாவது மறைவான செய்திகளையறிதல். இனி விரிச்சி கேட்டார்க்கும் அங்ஙனமே பால் நிறைந்த பெரிய மடிகளையுடைய நல்ல பசுக்களாக இரண்டொன்று சேர்த்துக் கொடுக்கும் வழக்கம் 'பிள்ளை வழக்கு' எனப்படும். இங்குப் 'பிள்ளை' யென்றது கரும்பிள்ளையான ஒரு கரிக்குருவியைக் குறிக்கும். அதன் நிமித்தம் பார்த்துச் சொன்னவர்க்கு அவர் செயலை யெடுத்துப் புகழ்ந்து கூறிக் கொடுத்தல் 'பிள்ளை வழக்' கெனப்பட்டது. 'கரும்பிள்ளை நிமித்தங் கூறியார்க்கு விதந்து கொடுத்த' * லென்று இதனை இலக்கணவிளக்க வுரை எடுத்துக் கூறுதலும் இங்கு உற்று நோக்கற்பாலது. இனி முதன் முதலிற் படையியங் கரவங்கொண்டு புறப்படும் பொழுது துடிகொட்டினார்க்குப், பின்னர்க் கள்ளுண்ணும்போது மிகுதியாய் வார்க்கு முறைமை 'துடிநிலை' யென்னுந் துறை. தமக்குத் துணையாய் வந்து தமது கருத்தை முற்றுப் பெறுவித்த கொற்றவைத் தெய்வத்தின் அருளை வியந்து பாராட்டி வணங்கும் நிலை 'கொற்றவை நிலை'யாம். இனி, மேல் நிகழ்த்தப்போகும் போர் முதலாயவற்றிற் கெல்லாம் துணை நிற்றற்பொருட்டு மறவரெல்லாரும் முருகனுக்கு வேலன் வாயிலாக வழிபாடியற்றுவிப்ப அஞ்ஞான்று அவர்தம் பெண்டிரிற் சிலர் வள்ளிக் கூத்தாடுதல் 'வெறியாட்டு' என்னுந்துறை. வள்ளிக்கூத் தென்பது மறவர் மகளிர் வள்ளி யுருவங்கொண்டு முருகக் கடவுளுக்கு ஆடுங் கூத்து. இக்கூத்தினியல்பினை,

" மண்டம ரட்ட மறவர் குழாத்திடைக்
கண்ட முருகனுங் கண்களித்தான்—பண்டே
குறமகள் வள்ளிதன் கோலங்கொண் டாடப்
பிறமக ளேறெற்றாள் பெரிது." †

என்னும் நச்சினார்க்கினிய ருரைமேற்கோட் செய்யுளானும் அறியலாம். 'இக் கூத்து ஆண்பாற்கும் பெண்பாற்கும் பொது' வென்று அவ்வுரையாசிரியரே பெரும்பாணாற்றுப் படைக்குரைத்த உரை

---

* இலக்கணவிளக், சூாகூ. † தொல், புறத், ருன் மேற்கோள்.

யிற் கூறுவர். * ஆயினும் அவரே தொல்காப்பியப் புறத்திணை யியற்குரைத்த உரையில் 'இது பெண்பாற்குப் பெருவரவிற்று' என்று கூறுதலின், இதனைப் பெண்பாற்கே பெரிதும் உரித்தெனக் கொள்க. இதனை 'இழிந்தோர் காணுங் கூத்'தென்றும் அவர் உரைப்பர். †

இனி இங்குக் காட்டிய புறப்பொருள் வெண்பாமாலையின் மிகையான துறைகள் ஐந்தனுள்ளும், புலனறி சிறப்பும், பிள்ளை வழக்குந் தொல்காப்பியனார் கூறிய 'பாதீடு' என்னுந் துறையுள் அடங்குதலும், 'துடிநிலை' யென்பது 'உண்டாட்டு' என்னுந் துறை யுள் அடங்குதலும் சற்றே கூர்ந்து நோக்கவல்லா ரெவரும் அறிந்து கொள்வர். மறவர்கள் கொற்றவையை வணங்குத லென்றது ஆநிரை கோடலென்னும் வெட்சித்திணை முழுவதூஉம் நிகழ்வதாமாதலாலும், நிரைகோட லென்னுஞ் செயலுக்கு அஃ தோர் உறுப்பாகமட்டும் அமைவதன்று மாதலாலும் ஆசிரியர் அதனைத் துறைக்கண் அடங்காமை கண்டு வெட்சித்திணை முழுமைக்குமே உரியதொரு கருத்தாக,

"மறங்கடைக் கூட்டிய துடிநிலை சிறந்த
கொற்றவை நிலையு மத்திணைப் புறனே." ‡

என்றொரு நூற்பாத் தனியே யியற்றிப் புறனடையாற் கொண் டார். இனி, மேல் நிகழவிருக்கும் போர் நிகழ்ச்சியின் வெற்றிப் பேற்றைப் பற்றிய 'வெறியாட்டு' என்னுந்துறையும் ஆநிரைகோடும் அளவின்மட்டும் அமைந்த வெட்சித்திணைக்கண் அடங்குவதன் றாதலின், அதனை ஆசிரியர் வெட்சித்திணைத் துறைகளுளொன்றா கக் கொள்ளாது எல்லாப் புறத்திணைகட்கும் பொதுவாயுள்ள பொதுவியல்புகளைப் பற்றிக் கூறுதற் கெடுத்துக்கொண்ட 'வெறி யறி சிறப்பின் வெவ்வாய் வேலன்'† என்னும் பொது நூற்பாவின் கண் 'வாடா வள்ளி' யென்னுங் கூற்றினாற் பெற வைத்தார். இவ்வாறு ஆசிரியர் தொல்காப்பியனார் தமது நூன் முறைக் கேற்பப் புறப்பொருட் செய்திகளை அமைத்துச் செல்லு முறை யும், அவரல்லாத ஏனைப் புறப்பொருள் வெண்பாமாலை யாசிரியர்

* பெரும்பாண், கூஎம.　　　　† தொல், புறத், ரு., ‡ ச.

முதலியோர் தமது நூன்முறைக்கேற்ப அவற்றை அமைத்துச் செல்லு முறையும், இலக்கண விலக்கியங் கற்பார் நுண்ணுணர்ந்து ஒன்றினென்றை இணைத்தமைத்துக் கற்றலிற் கருத்தூன்றற் பாலார். இவற்றுண் மாறுவன எவையும் இல்லையாயினும், தொல் காப்பியனுர் வகுத்தமைத்த பதினன்கு துறைகளே இவ்வெட்சித் திணைக்குச் சிறப்புடையவாய்த் திகழ்தலையும் மாணுக்கர் பிரித் தறிந்து மகிழ்தல் வேண்டும். ஆசிரியர் இளம்பூரணனரும் 'பிள்ளை வழக்கு, புலனறி சிறப்பு முதலியன அத்திணைச் சிறப்பில' வென்று உரை நிறுத்தினர். *

இனி ஆநிரை கோடலான இவ்வெட்சித்திணைச் செயல் பெரும்பான்மையும் இரவின் கண்ணே நிகழ்வதொன்றும். புறப் பொருள் வெண்பாமாலை, விரிச்சி கேட்டலைப் பற்றிக் கூறவந்த விடத்து,

' ஈண்டிருண் மாலை சொல்லோர்த் தன்று.' †

என்னுங் கொளுவினுலும்,

' எழுவணி சீறூ ரிருண்மாலை முன்றில்.' †

என்னும் வெண்பாவினுலும் அதற்குரிய நேரம் மாலைப்போதென்று கூறுதலாலும், பின்னர்ப் பகைப்புலஞ் சென்று ஆகொள்ளும் நேரத் தில் அங்கெதிர்த்துப் பொரும் நிரைகாவலரைப் பற்றிக் கூறும் பொழுது 'பகல் நேரத்தில் மட்டுந் தோல்வி யடையாது வெற்றி பெறவல்ல இந் நிரைகாவலர் இவ் விரவு நேரத்திற் றோல்வி யடைந்தா' ரென்னுங் கருத்துப்பட,

'—பகலே
தோலைவிலார் வீழத் தொகெழ லார்ப்பக்
கொலைவிலார் கொண்டார் குறும்பு.' ‡

என்று வரும் வெண்பாவினுல் ஆகொள்ளும் நேரம் இரவு நேரமே யென்று தெளிய வைத்தலாலும் மேலுண்மை அறியப்படும். விரிச்சி வேண்டாவென்று விலக்கியதற்குக் காட்டாக மேற்காட்டிய தகடூர் யாத்திரைப் பாட்டிலும் ஆநிரை கொள்ளும் நேரத்தை 'யாமம்' என்னுஞ் சொல்லால் நள்ளிராப் போதென்று குறித்தமை காண்க.

---

* தொல், புறத், ௩. † புறப்-வெ, ௧: ௪.
‡ „ ௧: அ.

# திருமுருகாற்றுப்படை விளக்கம்

[திரு. அ. நடராஜ பிள்ளையவர்கள்]

(நச்சினார்க்கினியர் போக்கின்படி யுரைநடை)

இது வீடு பெறுதற்கு விழைந்தா னொருவனை வீடு பெற்றா னொருவன், எல்லாம்வல்ல முருகப் பெருமானிடத்து ஆற்று (வழி)ப் படுத்ததுபோல் மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீர னார் குன்ற மெறிந்த குமரவேளைப் பாடிய திருமுருகாற்றுப் படை யினை விளக்கிச் செல்வதோ ருரைநடையாம்.

## (க) திருப்பரங்குன்றம்

'ஒரு பற்று மற்று அருவாய்த் தானே நிற்கும் தத்துவங் கடந்த' தனிப் பொருளாய கந்தழியைப் பெற்ற வொருவன், அதனைப் பெற விரும்பிய வேறொருவனை நோக்கி, "நல்வினையாள! முருகப்பிரான், உயிர்கள் மகிழும் வண்ணம் கீழ்த்திசையிற் றோன்றி மேருமலையை வலங்கொண்டு திரிகின்ற யாவரும் போற்றுங் கதிர வனைக் கடலினிடத்தே கண்டாற்போல மயிலின் மீதே அடியார் கட்குக் காட்சி கொடுப்பான். ஞாயிறு கிழக்கே தோன்றிய வள வில் எங்ஙனம் உலகிருள் கெடுகின்றதோ அங்ஙனமே பெருமானது அகக் காட்சியால் அறியாமை யிருள் நெஞ்சினின்று மகன்றோடும். பகலவன் செம்மையும் கடலின் பசுமையும் காட்சியிற் படுமாறு போலவே, எம்பெருமான் திருமேனிச் செம்மையும் மயிலின் பசுமை யும் காண்பார் கருத்தைக் கவர்ந்து வேறொன்றிலுஞ் சென்று தங்க விடாதபடி விளங்கும். அப்பிரான் அடியார்களைத் தாங்கும் அழகிய திருவடிகளையும் மடிபோர்களின் தீப்பண்புகள் கெடும் வண்ணஞ் செய்த கார்போல் வள்ளற் றன்மை கொண்ட கைகளையும், அறக் கற்பினைக் கொண்ட அம்மையாகிய தெய்வ யானையாரையும் கொண்டிருப்பன்; கடலினின் றெழுந்த கார்மா முகில்கள் பெய்த முதற் பெயலாலே செழித்த காட்டில், நெருங்கித் தழைத்த வெண்கடம்பினது குளிர்ந்த பூந்தாரானது அவன் மார்பிற் கிடங்

தசைந்துகொண்டிருக்கும். மூங்கிற் பண்ணைகள் வானளாவி யிருக் கும்படியான மிகவு முயர்ந்த மலையினது, குரங்குகளு மேறியறிய முடியாதபடி மரங்கள் நிறைந்த சாரலிற் பூத்த, அவன் சூடு தலில் வண்டுகளும் மொய்த்தறியாச் செங்காந்தட் கண்ணியை அப்பெருந்தகை சென்னியிற் சூடியிருப்பன்.

அம்மலையோ பல சோலைகளைத் தன்னிடத்தே கொண்டுள் ளது. அச்சோலைகளோ, தீண்டி வருத்துங் கொடுஞ் செயலைக் கொண்ட தெய்வமகளிர் பலர் கூடித் தம்முடைய தோழிமார்கள் சீவிக் கட்டிய தமது கூந்தலிற் சிவந்த காலினையுடைய வெட்சிப் பூக்களின் சிறிய விதழ்களைச் செருகி, அவைகட் கிடையிடையே, குவளைப் பூவிதழ்களைக் கிள்ளி யிட்டு, சீதேவி, வலம்புரி என்னுந் தலைக்கோலங்களை வைத்து, பொட்டிட்ட மணக்கின்ற தமது நுதல்களிலே சுறு மீனினைப் போற் றிறந்த வாயொடு கூடிச் செய்த தலைக்கோலம் வந்து தொங்கும் வண்ணம் செய்து, தமது கொண்டைகளிலே பெரிய சண்பகப் பூக்களைச் செருகி, மருதின் அழகிய பூங் கொத்துக்களையும் அக்கொண்டையிலேயே சூடி, நீர்க் கீழ்ச் செவ்வரும்புகளாற் கட்டப்பட்ட மாலையை அக்கொண்டை யின் நாற்புறமும் வளைத்துக் கட்டி, அழகிய விரண்டு செவிகளி லும் அசோகின் இளந்தளிர்களை யணிந்து அவைகளைத் தமது மார்பிலே தோய்ந்துகொண்டிருக்கச் செய்து, சந்தனக் குழம் பைத் தமது இளமுலைகளிலே அப்பி, அவ்வீரம் புலர்வதற்கு முன் வேங்கைப் பூவின் மெல்லிய பூந்தாதினை யதன்மேற் றூவி, விளா வின் சிறிய தளிர்களைத் தமக்குள் ஒருவர்மே லொருவர் வீசிப் போட்டுக் கொண்டு குமரவேளின் கோழிக் கொடியை வாழ்த்தி மலையெங்கு மெதிரொலி கொள்ள அவன் புகழைப்பாடி விளை யாடுஞ் சிறப்பினை யுடையவாம்.

அத் தெய்வ மகளிரோ சிறு சதங்கை யணிந்த சிவந்த சிறிய அடிகளையும், திரண்ட கால்களையும், கொடிபோல் வளைந்தாடுகின்ற விடையினையும், மூங்கில் போன்ற தோள்களையும், இந்திர கோபப் பூச்சி போன்று இயல்பிலே சிவந்த வாடைகளையும், மேகலை யணிந்த வரையினையும், இயற்கை யழகினையும், 'சாம்பூநத' மென்ற

பொன்னாற் செய்யப்பட்ட வணிகளையும், நேர்த்தியான ஆடையினை யுங் கொண்ட சூரரமகளிராவர்.

அச் செவ்வேளின் வாழ்க்கையிற் சிவந்த வேலொன்று விளங்கும். அவ்வேல், பெண் பேய்கள் கைகளில் கண்கள் தோண்டி யுண்ணப்பட்ட புலால் நாற்றமுடைய பெரிய தலைகளை வைத்துக் கொண்டு, பிணஞ் செறிந்த வாயினாலே மற்ற அரக்கர்கள் அஞ்சும் படி போர்க்களத்தைப் புகழ்ந்து பாடித் தோள்களை யசைத்துத் துணங்கைக் கூத்தாட, குதிரை முகமும் மக்களுடலுமாகிய விரண்டு வடிவினை யுடைய சூரபன்மாவைக் கொன்று பின்னும், கீழ் நோக்கிய பூங்கொத்துகளையுடைய மாமரமாகி நின்ற அவனை யழித்த வெற்றியினையும் அளவிடப்படாத விசையினையுங் கொண்ட தாம்.

அப் பெண் பேய்கள், உலர்ந்த மயிரினையும், பிறழ்ந்த பற்களை யும், பிளந்த வாயினையும், சுழல்கின்ற விழியினையும், பச்சை நிறமான பிதுங்கிய கொடிய பார்வையினைக் கொண்ட கண்களையு முடை யனவாய், பேராந்தையோடு கொடிய பாம்புகள் தங்கி மார்புகளிலே வந்து மோதும்படியான நீண்ட காதுகளையும், கரடு முரடான வயிற்றினையும், கண்டார் அச்சப்படும்படியான நடையினையும், குருதி தோய்ந்த விரல்களையுடைய கைகளையும் கொண்டவைகளாம்.

அச் செங்கதிரை யொத்த சேயினது திருவடியாகிய வீட்டை யடைய நீ விரும்புவையாயின், வேண்டும் பல நற்கருத்துக்களும், உன்னெஞ்சில் நெடுங்காலமாய் நிலை கொண்டிருக்கும் இனிய வீடு பேறும் இப்பொழுதே தவறாமற் பெற்றவனாவாய். அவ்வீடு பேற்றை அம்முருகனைக் கண்டடைதற்கு அவன் எவ்விடத்தி லிருப்பனென்று வினவுவையாயின், யான் சொல்வதைக் கேட்பா யாக.

பழைமையான கூடன் மாநகரின் குடதிசையில், அழகிய வண்டுகளின் கூட்டம் வயல்களிலே மலர்ந்திருக்கும் தாமரைப் பூக்களில் இரவி துறங்கி, வைகறைப் போதில் தேனிறைந்த நெய்தற் பூக்களில் உண்டு, ஞாயிறு தோன்றுங்கால சுனைகளில் மலர்ந்த நீல மலர்களிற் சென்று பாடியாடும்படியான திருப்பரங்

குன்றிலே விருப்பமோ டெழுந்தருளி யிருப்பன், அம்முருகப் பிரான்.

அக் கூடன் மாநகர் எப்படிப்பட்ட தெனிலோ, விருது மொழிகள் கூறிக் கட்டின வெற்றிக் கொடிகட்குப் பக்கத்திலே பந்தும் பாவைகளும் அறுக்கக் கூடிய எதிரிகளின்மையால், ஆடிய படியே யிருக்க, பகைவர்களை யெல்லா மொழித்த பாண்டியனின் வீர மிகுதியால் போரினைக் கண்டு நெடுங்காலமாகிய கோட்டை வாசல்களையும், திருமகள் எப்பொழுதும் விட்டு நீங்காத அங்காடித் தெருக்களையும், மாடகூட மலிந்த மற்றைய மறுகுகளையும் கொண்ட மதுரைமா நகராம்.

---

# தேரையர் மகாகரிசல்

[திரு. மா. வடிவேலு முதலியாரவர்கள்]

(சு - ஞ் சிலம்பு சுஅச - ம் பக்கத் தொடர்ச்சி)

## வினைதீர்த்தார் வணக்கம்

நேரிசை வெண்பா

தான்மனைசேய் மன்னமைச் சன்மீளி நோய்மருந்து
மேன்மிளகு சுக்குகணை மேவியதைப்—போன்முறையைப்
பார்த்தாள்வா ராதலினிப் பாரின்முன் னோர்க்குவினை
தீர்த்தா ரெனுநாமஞ் சீர்.

(சொற் கூட்டு) மன் அமைச்சன் மீளி நோய், மேல் சுக்கு மிளகு கணை மருந்து மேவியதைப்போல் தான், மனை, சேய் முறையைப் பார்த்து ஆள்வார், ஆதலின் இ பாரில் முன்னோர்க்கு வினை தீர்த்தார் என்னும் நாமம் சீர் என்பது.

(சொ-ள்.) மன் (நோய்) - அரசனான வளி (வாத) நோய்க்கும், அமைச்சன் (நோய்) - மந்திரியான தீ (பித்த) நோய்க்கும், மீளி நோய் - படைத்தலைவனான ஐய (சிலேஷ்ம) நோய்க்கும், மேல் - முறையே, சுக்கு மிளகு கணை - சுக்கு மிளகு திப்பிலி என்னும் மூன்றுபொருள்களும், மருந்து மேவியதைப்போல் - மருந்துகளா

எற்பட்டுக் (அவற்றைப்போக்கி உடலைக்) காப்பதுபோல, தான் மனைசேய் - வயித்தீச்சுரரும், மனைவியாகிய தையனாயகியம்மையும், பிள்ளையான முத்துக்குமாரசாமியும், முறையை - என்னாற் செய்யப்பட்ட தென்னாட்டு முறைகளான கரிசல் என்னும் நூலை, பார்த்து - திருவருட் பார்வை செலுத்தி, ஆள்வார் - அதற்குண்டாகும் இடையூறுகளைத் தீர்த்துக் காத்தருள்வார்கள், ஆதலின் - ஆகையால், இ பாரில் - இத்தென்னாட்டில், முன்னோர்க்கு - அத் தான், மனை, சேய் என்று முன்சொல்லப்பட்ட வயித்தீச்சுரர், தையனாயகியம்மை, முத்துக்குமாரசாமி என்னும் இம்மூவர்க்கும், வினைதீர்த்தார் என்னும் நாமம் - வினைதீர்த்தார் என்னுந் திருப்பேர், சீர் - சிறப்பாகவுள்ளதாம் (எ - று.)

அன்றி, முன்னோர்க்கு வினைதீர்த்தார் என்னும் நாமம் சிறப்பாயுள்ளதால் முறையைப் பார்த்தாள்வார் என உரைப்பினு மமையும். அது நூற்காப்புக்குச் சிறப்பாகாது.

(பொ - ரை.) வளி, தீ ஐகளாலுண்டாகும் நோய்களைச் சுக்கு, மிளகு, திப்பிலி என்னும் மூன்று பொருள்களும், முறையே நீக்கி உடலைக் காப்பதுபோல் வயித்தீச்சுரரும், அவருடைய மனைவி தையனாயகியம்மையும், அவர்களுடைய பிள்ளை முத்துக்குமாரசாமியும், இந்நூற்குண்டாகும் இடையூறுகளை நீக்கிக் காத்தருள்வாராகையால் இவர்களுக்கு வினைதீர்த்தார் என்கிற திருப்பேர் சிறப்பாக உள்ளதாம் என்பது.

மன் என்னும் வளி, மீளி என்னும் ஐயம், என்னும் இவ்விரண்டு நோய்களின் குறிகளை முதற்பாட்டடியிலும், இரண்டாம் பாட்டடியிலுங் காண்க.

அமைச்சன் என்னும் தீ நோயின் குறிகளை ஈண்டுக் காண்க. அது;

"ஆகு மந்திரி பாடலம் உடலம்
ஆங் கசப்புவாய் அரக்கைநேர் கண்ணும்
ஆனனம் மேதினி மாதிரந் தலை
ஆட நடுங்குஞ் சலிலத்தே வாய்

ஆறு மிகுந்துஞ் சுரப்பா கும்மே
ஆயாசம் மிளைப் பரோசக மிகும்''

என்று இந்நூலிலும்,

''பாடலமெய் மாநாகம் பாறுநிக ராகவுடல்
பாடலமெய் மாநாகம் பாறுமே—பாடலங்கம்
பித்தசுர மாகவரு பேராக் கினிமயமாம்
பித்தசுர மாகவரு பேய்''

என்று யமக வெண்பாவிலும் தேரர் சொல்லுவதாலும்;

தீச் (பித்த) சுரத்தின் குணத்தை;

''பித்தசுரத் தின்குணத்தை யுரைக்கும் போதில்
பெரிதான மருத்துநூல் சொன்ன வாறே
நித்திரையிஞ் சும்வயிறு பேதி யாகும்
நினைந்துநினைந் தெழுந்திருந்தே யோடி மீளும்
கைத்திருக்கும் வாயுலர்ந்து பிதற்றல் செய்யும்
கடுந்தாகம் வாந்தியுடன் மூர்ச்சை விக்கல்
மெத்தவுமே சந்தாபப் படுத விந்த
விதமனைத்து மறைநூலில் மேவுந் தானே''

எனவும்;

''முந்து சரீர மழன்றுதான் முகரோ வாகி முகமினுங்கி
அந்த முகமும் விழியிரண்டும் அனலே மிகுந்து நாக்குலர்ந்து
தந்த முடனே மலசலங்கள் தாமு மஞ்சள் ப்ரலாபிக்கும்
பந்தணி விரலா யிவைதாமும் பயித்திய சுரத்தின் செயலாமே''

எனவும்;

''பகுந்திடும் பித்தம் பலபல சிந்தையாம்
வகுந்திடும் வாந்தியும் வாய்நீர் மிகவூறும்
மகிழ்ந்திடு மேனியின் மாட்டி யெரிப்பேறும்
மிகுந்து தவனிக்கு மிகவிடங் கைக்குமே''

எனவும் கூறியுள்ளவற்றா லுணர்க.

இனிச் சுக்கு வளிப்பிணியை நீக்கும் என்பதை;

''வாதப் பிணிவயி றூதற் செவிவாய்
வலிதலை வலிகுலை வலியிரு விழிநீர்
சீதத் தொடுவரு பேதிப் பலரோ
சிகமலி முகமக முகவிடி கபமார்

சீதச் சுரம்விரி பேதச் சுரநோய்
தெறிபடு மெனமொழி குவர்புவி தனிலே
ஈதுக் குதவுமி தீதுக் குதவா
தெனும்விதி யிலைநவ சுறுகுண முனவே"

என்பதாலும்,

"சூலைமந்த நெஞ்செரிப்பு தோடமேப் பம்மழலை
மூல மிரைப்பிருமல் மூக்குநீர்—வாலகப
தோட மதிசாரந் தொடர்வாத குன்மநீர்த்
தோடமா மம்போக்குஞ் சுக்கு"

என்பதாலும்;

மிளகு பித்தப் பிணியை நீக்கும் என்பதை,

"சீதசுரம் பாண்டு சிலேஷ்மங்கி ராணிகுன்மம்
வாத மருசிபித்த மாமூலம்—ஓதுசந்நி
யாச மபஸ்மாரம் அடல்மேகங் காசமிவை
நாசங் கறிமிளகி னால்"

எனவும்;

"கோணுகின்ற பங்கவலி குய்யவுரோ கம்வாத
சோணிதங்க ழுத்திற்குள் தோன்றுநோய்—காணரிய
காதுநோய் மாதர்குன்மங் காமாலை மந்தமென்றீர்
ஏதுநோய் காயிருக்கி லிங்கு"

எனவும் வருவனவற்றாலும்,

திப்பிலி ஐயப்பிணியை நீக்கும் என்பதை,

"இருமல் குன்ம மிரைப்பு கயப்பிணி
ஈளை பாண்டுசெந் யாசம ரோசகம்
பொரும லூதை சிரப்பிணி மூர்ச்சைநோய்
பூரிக் குஞ்சல தோடமும்பீலிகம்
வரும லப்பெருக் கோடுமெ கோதரம்
வாத மாதிமுத் தோடஞ் சுரங்குளிர்
பெரும லைப்புரி மேகம் பிடகமும்
பேருந் திப்பிலிப் பேரங் குரைக்கவே"

எனவும்;

"ஆசனநோய் தொண்டைநோ யாவரண பித்தமுதல்
நாசிவிழி காதிவைநோய் நாட்புழுநோய்—வீசிடுவி

யங்கலாஞ்ச னஞ்சிதையும் அம்பா யழிவிந்தும்
பொங்கலாஞ்ச நங்கையர்கோட் போல்"

எனவும் வருவனவற்று ளுணர்க.

'முறையை' என்றதற்குத் தென்னாட்டு முறை என்று எழு தினமை :

"தெவ்வடர் பற்பமுந் தெரிந்தசெந் தூரமும்
தெள்ளுமாத் திரையுடன் தென்மைசெய் கிருதமும்
தெரிவுறு லேகியமும் தென்னிடு தயிலமும்
தென்முனி முறையினிற் றென்மொழி வாகடத்
தெம்பினிற் கைவரத் தெய்வரட் சணையிதே"

என்று இந்நூலிலேயே புகன்றிருத்தலினு லென்றறிக.

(தொடரும்)

---

# 'உயர் நிலையடைவ தெங்ஙனம்?'

(திரு. M. P. S. வேலாயுதம் பிள்ளையவர்கள்)

அவாவுடைய மனிதன் பிறரைத் தூய்மைப்படுத்துவதிலேயே அடிக்கடி முனைந்து நிற்கின்றான், ஆனால் அறிஞனயுள்ள மனிதனே தன்னையே தூய்மைப்படுத்திக்கொள்ளுகிறான். ஒருவன் உலகத்தைச் சீர்திருத்த உளங்கொள்வானுயின், அவன் தன்னையே முதலில் சீர்திருத்தத் தொடங்கட்டும். தன்னைச் சீர்திருத்துவதென்பது விருப்பத்திற்குரியவற்றை பொழிப்பதுடன் முடிவடையவில்லை. முடிவுக்கு அது தொடக்கம், ஒவ்வொரு வீண் எண்ணமும், தன்னல நோக்கமும் அறவே பொழியும்போதுதான் அது முடிவடைகிறது. மாசற்ற தூய்மையும், அறிவும் அடையப் பெறும்வரை, ஒழிக்கப்படவேண்டிய ஒருவகைத்தான தன்னடிமைத்தனமோ அல்லது தவறோ இருந்தேவருகிறது.

---

* ஜேம்ஸ் ஆலன் என்ற ஆங்கில நாட்டுப் பெரியார் இயற்றியுள்ள அறிவுரைகளின் மொழிபெயர்ப்பு.

உயரிய நோக்கமாகிய இயற்கைகளின் உதவியான், மனிதன், இம்மையினின்றும் மறுமைக்கும், அறியாமையினின்றும் அறிவுச்சுடரை நாடியும், கீழே சூழ்ந்துள்ள இருட்டினின்றும், மேலே நிலவும் ஒளியை யடையவும் செல்கின்றான். அஃதில்லா தொழியின், அவன் உலகப்பற்றும், சிற்றின்பமும், அறியாமையும், அறிவுவொளியுமற்ற இழிவான விலங்காகவே யிருக்கிறான்.

முதலில் உற்றுநோக்கவேண்டியவை முதலில் உற்றுநோக்கப் படவேண்டும்; விளையாட்டுக்குமுன் வேலை; களியாட்டுக்குமுன் கடமை; தன்னலத்துக்குமுன் பிறர்நலம்; நேர்வழியினின்றும் பிறழச் செய்யாத செவ்விய ஒழுங்குமுறை இதுவாகும். சரிவரத்தொடங்குதல் வெற்றிவழியில் அரைவாசி சென்றதாகும். தொடங்குங்காலே தவறிழைக்கும் உடற்பயிற்சி வல்லுநன், அவனடையக்கூடிய வெகுமதியையு மிழக்க நேரிடும்; உண்மையுடன் தன்தொழிலைத் தொடங்காத வணிகன், நாணயமிழந்துபோவான்; உயர்நிலையைபடையப் பாடுபடு மொருவன் தவறுவானேல், நேர்மையாகிற மணிமுடியையே இழந்துவிடுவான்; துவக்கத்திலேயே தூய எண்ணங்கள், மேதக்க நேர்மை, தன்னலமொழிந்த கருத்து, உயரிய நோக்கங்கள், ஒருகாலும் மாசடையாத உளச்சான்று ஒழுங்குபெறத்தொடங்குவதூஉதே. வாழ்க்கையை எளிதாகவும், அழகுபெறவும், வெற்றியுடனும், அமைதியாகவும் நடைபெறச்செய்ய ஏனைய ஏதுக்களும் மாறுபாடின்றி நிகழ, முதலில் உற்று நோக்கப்படவேண்டியவை முதலில் உற்று நோக்கப்படவேண்டுமென்றது இஃதே.

விலங்கு நிலை மனிதனுக்கு இனிமை யூட்டுமளவும், அவன் உயர்நிலையடைய முடியாது; அதுவரை அமைதிகொண்டிருக்கலாம்; ஆனால் அவ்வினிமை வெறுப்பாக மாறுங்கால், அவன் வருத்தமே விட்டு, உயர்நிலையையடைய எண்ணுகிறான். அவனுக்கு உலகவின்பம் மறுக்கப்படும்போழ்து, தூய்மையான அறிவின் இன்பத்தை நுகர அவாவுகின்றான். துப்புரவில்லாமை துன்பமாக மாறும் போதுதான், துப்புரவாயிருக்க நாடுவது; தவறிழைத்த பின்னர் வருந்துவதிலிருந்தே, உயர்நிலையடைய உன்னுவது. ஆனால் வன்மை பொருந்திய அதலிறக்கைகளி னுதவியால் மனிதன் உயரியமேனிலையை யடைய முடியும்.

உயர்நிலையையடைய விரும்புவோன் அமைதியான வாழ்வுக்குரிய வழியில் நடக்கத்தொடங்கிவிட்டான்; அவன் நின்றுவிடாமலும், பின்வாங்காமலுமிருப்பானாகில், வெற்றி பெறுவது திண்ணம். அவன் அவ்வப்போது தூய்மையாயுள்ள நிலையை உள்ளத்தில் உருச்செய்து கொண்டுவந்தால், உயர்நிலையை அவன் அடைந்துவிடுவான்.

## விரும்பும் வண்ணமே

மனிதன் தான் விரும்பும் வண்ணமேயாகின்றான், அவன் எதனை யடைய விரும்புகிறானோ, அஃது அவன் அடையக்கூடியதற்கோர் அறிகுறியாகும், ஒன்றனை அடைய உளங்கொள்வது அதனை அடையவிருப்பதை முன்பாகவே உறுதி செய்வதாகும். இழிவானவற்றை மனிதன் எவ்வாறு உணரவும், அறியவும் இயலுமோ, அவ்வாறே அவன் உயர்வானவற்றை உணரவும், அறிந்து கோடலும் இயலும். அவன் மனிதன் ஆனமைபோன்று, கடவுளாதலும் கூடும். உளத்தை உயர்நிலைக்கும், கடவுட்டன்மைக்கும் திருப்புதலே முதன்மையான கட்டாயமுள்ள வேலையாகும்;

நினைப்பவனின் தூய்மையற்ற எண்ணங்களல்லாது, தூய்மையற்ற தன்மை பிறிதேது; தூய்மையரின் எண்ணங்களல்லாது, தூய்மை பிறிதுண்டோ? ஒருவன் உளங்கொண்டிருப்பதைப் பிறனொருவன் செய்வதில்லை. ஒவ்வொரு மனிதனும் தூய்மையுடையனாகவோ அன்றித் தூய்மையற்றோனாகவோ, தானேயாகிறான், உயர்நிலையடைய விரும்புவோன் உயர்நிலை யடைவதற்கான வழியைத் தன்முன் பார்க்கிறான், இறுதியாய் அவன் அடையவிருக்கும் அமைதி நிலையை அவன் நெஞ்சம் முன்னதாகவே உணர்கிறது.

மேலுலகத்தின் கதவுகள் எப்போதும் திறந்தேயுள்ளன. எவனும் தனதல்லாத, பிறன்விருப்பத்தாலோ, வலிமையாலோ ஆங்குப் புகுவது தடுக்கப்படவில்லை. ஆனால் உலகமயக்கிலுழன்று, அப்பற்றினையே விரும்பியிருக்குந்துணையும், தீவினைக்கும், துன்பத்துக்கும் ஆளாயிருக்குமளவும் எவனும் மேலுலகத்தை அடையமுடியாது.

தீவினையுந் துன்பமும் கூடிய வாழ்வையன்றிப் பெரிய, உயரிய மேன்மையான கடவுட்டன்மையானதோர் வாழ்விருக்கின்றது. அஃது எளிதானது. எல்லோரும் அதனையே அடைய ஆழ்ந் திருக்கிறார்கள், தீவினையை அறவேயொழித்தவாழ்க்கை, கேட்டி னைப்போக்கி வெற்றிமாலை சூடிய வாழ்க்கை; அறிவும் மகிழ்ச்சியும் நன்மையும் பொறுமையும் ஒழுக்கமும் அமைதியும், சாலவே அமை யப்பெற்ற வாழ்க்கை அஃதே, இவ்வாழ்வினைத்தேடி இன்றேபடை யவுங்கூடும். இத்துறைபற்றிவாழ்வோன், எத்தகைய மாறுதலிடை யேயும் உறுதியுடனும், கவலையுற்றிருப்பவர்களிடையே பொறுமை யாகவும், சச்சரவுகளாற் சூழப்பட்டிருப்பினும் அமைதியுடனும் வதிகின்றான்.

---

# தேவாரக் கோய்மலர்

[திரு. M. S. பூரணலிங்கம் பிள்ளையவர்கள் B.A., L.T.]

## திருஞானசம்பந்தர்-திருமுறை க.

க என்னுள்ளங் கவர் கள்வன் (பிரமபுரம்)

உ கற்றல் கேட்ட லுடையார் பெரியார் ,,

ந. குறிகலந்த விசைபாடல் (புகலூர்)

ச வாசிதீர வடியார்க் கருள்செய்து வளர்ந்தான் (வலிதாயம்)

ரு முடிகையி னுற்றொடு மோட்டுழவர்
முன்கைத் தருக்கைக் கரும்பின்கட்டிக்
கடிகையி னுலெறி காட்டுப்பள்ளி
காதல்செய் தான்கரி தாயகண்டன் (காட்டுப்பள்ளி)

சூ செந்தமிழோர்கள் பரவியேத்துஞ் சீர்கொள்
(செங்காட்டங்குடி)

எ சுதியருளென்று கையாரக்கூப்பி (ஆவூர்ப்பசுபதீச்சரம்)

அ கலையாரொடு சுருதித்தொகை கற்றோர்மிகு கூட்டம்
(வேணுபுரம்)

௯ பண்ணும் பதமேழும் பலவோசைத் தமிழவையு
முண்ணின்ற தோர்சுவையும் முதுதாளத் தொலிபலவும்
(வீழிமிழலை)

௰ கருகுகுழன் மடவார்கடி குறிஞ்சியது பாடு
முருகன்னது பெருமைபகர் முதுகுன்றடைவோமே
(முதுகுன்றம்)

௧௧ பறையும் பழிபாவம் படுதுயரம் பலதீரும் (நெய்த்தானம்)

௧௨ கலைநிலவிய புலவர்களிடர்
களைதருகொடை பயில்பவர் (வீழிமிழலை)

௧௩ இலையார் மலர்கொண் டெல்லி நண்பகல்
நிலைபா வணங்க நில்லா வினைகளே (செம்பொன்பள்ளி)

௧௪ பசைவி ளங்கப் படித்தா ரவர்போலும்
வசைவி ளங்கும் வடிசேர் நுதலாரே (புத்தூர்)

௧௫ பொடிகள் பூசிப் புறங்கா டரங்காகப்
படிகொள் பாணி பாடல் பயின்றாடும் (சோற்றுத்துறை)

௧௬ பூசம் புகுந்தா டிப்பொலிந் தழகாய
ஈச னுறைகின் றவிடை மருதீதோ (இடைமருதூர்)

௧௭ தேக்குந் திமிலும் பலவுஞ் சுமந்துந்திப்
போக்கிப் புறம்பூ சலடிப் பவருமால்
ஆர்க்குந் திரைக்கா விரி

௧௮ ஊனத் திருணீங் கிடவேண்டில்
ஞானப் பொருள்கொண் டடிபேணும்
தேனைத் தினியா னமருஞ்சேர்
வானம் மயிலா டுதுறையே.
(மயிலாடுதுறை)




௧௯ பொய்த்தவம் பேசுவதல்லாற்
புறனுரையாதொன்றுங் கொள்ளேன் (வேட்களம்)

௨௰ சங்கம தார்குற மாதர் தங்கையின் மைந்தர்கள் தாவிக்
கங்குலின் மாமதி பற்றுங் கற்குடி மாமலை யாரே. (கற்குடி)

௨௧ தேனிடை யார்தரு சந்தின் திண்சிறை யாற்றினை வித்திக்
கானிடை வேடர் விளைக்குங் கற்குடி மாமலை யாரே ”

உஉ மங்கையை வாட மயல்செய்வதோ இவர்மாண்பே.

(பாச்சிலாச்சிராமம்)

உங கேடும்பிறவியு மாக்கினுருங் கேடிலா
வீடுமாநெறி விளம்பினுரெம் விகிர்தனுர். (ஆலங்காடு)

உச நூலடைந்த கொள்கையாலே நுன்னடி கூடுதற்கு
மாலடைந்த நால்வர்கேட்க நல்கிய நல்லறத்தை (சேய்ஞலூர்)

உரு பீரடைந்த பாலதாட்டப் பேணுத வன்ருதை
வேரடைந்து பாய்ந்ததாளை வேர்தடிந்தான். ,,

உசா பெண்டிர்மக்கள் சுற்றமென்னும் பேதைப்பெருங் கடலை
விண்டுபண்டே வாழமாட்டேன் (வலிவலம்)

உள துஞ்சும்போதுந் துற்றும்போதுஞ் சொல்லுவனுன் றிறமே. ,,

உஅ கற்றகேள்வி ஞானமான காரணமென்னைகொலாம் (சோபுரம்)

உகூ விருத்தனுகிப் பாலனுகி வேதமோர்நான் குணர்ந்து
கருத்தனுகி (நெடுங்களம்)

ஙயி சழிந்தசென்னிச் சைவவேடந் தானிணைத்தைம் புலனும்
அழிந்தசிந்தை யந்தணாளர்க் கறம்பொருளின் பம்வீடு
மொழிந்தவாயான் முக்கணுதி மேயதுமு துகுன்றே.

(முதுகுன்று)

ஙக வெவ்வ மேனிய ராய்வெள்ளை நீற்றினர்
எவ்வஞ் செய்தெ னெழில்கொண்டார் (பாற்றுறை)

ஙஉ பன்னீர்மை குன்றிச் செவிகேட்பியிலா
படர்நோக் கிற்கண் பவளங்நிற
நன்னீர்மை குன்றித் திரைதோலொடு
நரைதோன் றுங்கால நமக்காதன்முன்

(தூங்கானைமாடம்)

ஙங பல்வீழ்ந்து நாத்தளர்ந் துமெய்யில்வாடிப்
பழிப்பாய வாழ்க்கை யொழிய ,,

ஙச அமரர்கோனுரை யென்னிடைக்கே வரவொருகாற் கூவாயே

(தொடரும்) (தோணிபுரம்)

## அந்தாதி நூல்கள் (கழகப்பதிப்பு)

**அதிவீரராமபாண்டியர்**

திருக்கருவைக் கலித்துறையந்தாதி 0 2

திருக்[illegible]வ வெண்பாவந்தாதி 0 2

திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி 0 2

**சிவப்பிரகாச சுவாமிகள்**

பழமலையந்தாதி மூலம் 0 2

திருச்செந்தில் நிரோட்டகயமகவந்தாதி 0 1

பழமலையந்தாதி உரை 0 7

**சிவஞான சுவாமிகள்**

குளத்தூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி 0 2

இளசைப்பதிற்றுப்பத்தந்தாதி 0 2

கலைசைப்பதிற்றுப்பத்தந்தாதி 0 2

**கம்பர்**

சரசுவதி யந்தாதி 0 1

**துறை. நமச்சிவாய தேவர்**

அருணகிரி யந்தாதி 0 2

**பரஞ்சோதி முனிவர்**

மதுரைப்பதிற்றுப்பத்தந்தாதி 0 2

**தலைமலைகண்ட தேவர்**

அபிராமியந்தாதி 0 2

## அந்தாதிக்கொத்து முதற்பாகம் (வெளிவந்துவிட்டது)

இதன்கண் மேற்கண்ட பன்னிரண்டு அந்தாதிகளும் அடங்கியுள்ளன. நூலாசிரியர் வரலாறுகளும் பாட்டு முதற்குறிப் பகராதியும் சேர்க்கப்பெற்றிருக்கின்றன.

அழகிய கலிக்காக் கட்டிடம் ரூ. 1 12

## சிவஞானபோதச் சுருக்கம் (வசனம்)

சிவஞானபோதச் சூத்திரக் கருத்துக்களை யாவரும் எளிதி லுணருமாறு எளிய இனிய உரை நடையில் இந்நூல் எழுதப்பட்டிருக்கின்றது. இதன்கண் சமய பேத விளக்கமும், சிவஞானபோத நூல் விளக்கமும், சிவஞானபோதச் சூரணிக் கொத்தின் ஆங்கில மொழி பெயர்ப்பும் அடங்கியுள்ளன. ராப்பர் விலை அ. 8, கலிக்கா அ. 12

## கந்தபுராணம் விருத்தியுரை

| | ரூ. | |
|---|---|---|
| 1. உற்பத்திக் காண்டம் | 5 | 8 |
| 2. அசுர காண்டம் | 5 | 0 |
| 3. மகேந்திர காண்டம் | 3 | 8 |
| 4. உபதேச காண்டம் | 5 | 8 |

## கம்பராமாயணம் உரையுடன்

(சே. கி. கிருஷ்ணமாச்சாரியார் பதிப்பு)

| | | |
|---|---|---|
| அயோத்தியா காண்டம் உரை (வெளிவந்துவிட்டது) | 5 | 0 |
| பாலகாண்டம் உரை | 5 | 0 |
| சுந்தரகாண்டம் உரை | 5 | 0 |
| கிஷ்கிந்தா காண்டம் உரை | 4 | 8 |
| ஆரணியகாண்டம் உரை | 4 | 0 |
| கம்பராமாயண மூலம் 2 பாகம் | 10 | 0 |
| ஷை வேறு பதிப்பு | 8 | 0 |
| ,, வசனம் கிளேஸ் 2 பாகம் | 12 | 0 |
| (திருவாய்மொழி வியாக்யானம் அல்லது) ஸ்ரீ பகவத் விஷயம் 7 தொகுதி | 41 | 0 |

## சைவப்பெரியார் பிரிவாற்ருமை

நேற்று மார்கழித் திங்களில், திருவாளர் கயப்பாக்கம் சதாசிவச் செட்டியார் B. A. என்னும் அருமைப் பெரியாரை நம் சைவத் தமிழ்நாடு இழந்துவிட்டமைக்கு யாம் பெரிதும் இரங்குகின்ருேம்.

செட்டியாரவர்கள் தமது இளமை தொட்டே திருமுறைப் பயிற்சியிற் பயின்று பழகி அதன்கண் சிறந்த ஆராய்ச்சித் திறன் பெற்றிருந்தனர். சைவ சித்தாந்தக் கல்வியுந் தமிழ்ப் புலமையும் வடமொழிப் பயிற்சியும் உடன்வாய்ந்து விளங்கினர். ஆங்கிலப் புலமையிலுஞ் சிறந்து பட்டம் பெற்றனரேனும், அதன் நாகரீக முறைகளில் நெஞ்சங் கதுவப் படாமற் றிகழ்ந்தனர். இனைய அரிய நன்மைகள் வாய்க்கப் பெற்ற பெரியார் இளமையில் தாம் அரசாங்க அலுவலில் அமர்ந்திருந்தும் அதனையும் அதனுல் வரும் பொருளையும் பொருட் படுத்தாமல் விடுத்துத் தமது திருமுறை யாராய்ச்சிகள் முதலான சமயக் கல்வியைச் சைவநாட்டுக்குத் தருதலெண்ணிச் சமயத் தொண்டில் இறங்கிச் சென்னையிலும் வேறு வெளி நகரங்களிலும் அளவிலாத விரிவுரைகள் செய்து வந்த பெருமை அவர்க்குரியது. அகத்தியர் தேவாரம், சேக்கிழார் பிள்ளைத்தமிழ், திருக்கைலாய ஞான வுலா முதலியவற்றிற்கு உரை யெழுதினர். வடமொழியிலிருந்து 'சிவரகசியம்' மொழிபெயர்த்தனர். பன்னிருதிருமுறைத் திரட்டொன்றும் திரட்டி வெளிப்படுத்தினர். இறுதியாக நம் கழக வாயிலாக மூவர் தேவாரமும் ஆராய்ந்து பதிப்பித்தனர். இம்மூவர் தேவாரத்துக்கும் ஓர் அரும்பெறல் ஆராய்ச்சியை அவர்பால் எதிர்பார்த்திருந்தோம்; ஆனுல் இழந்தோம். இவ்வரிய பெரியார்க்குச் சைவநாடு தக்க உதவி யளிக்காமற் போனது பெரிதும் வருந்தத் தக்கது. இனி யென் செய்வது? இப்பெரியா ருயிர் திருவருளிற் படிவதாகுக!

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

Published by V. Subbiah, for The S. I. S. S. W. P. Society,